# டி.டி.வாசு:

எப்போதும்
புன்சிரிப்பு!

எடுத்த தெல்லாம்
பெருஞ்சிறப்பு!

KALKI
3.3.85
ரூ.1-50



# கல்கி




# போர்ன்விடாவின் இனிமைக் காலம்

போர்ன்விடா அளித்தவரை பாச மனங்கள்
நேசத்தோடு நினைத்து மகிழும் ஒருநாள்!

வளரும் குழந்தைகள் வேறு எந்த மால்ட்டட் பானங்களையும்விட போர்ன்விடாவை விரும்பு வதேன்? போர்ன்விடா அருந்தி வளர்ந்த இரு தலைமுறையினர் தங்களுடைய குழந்தைகளுக்கு போர்ன்விடா தவிர வேறு எதுவும் உகந்ததல்ல என்று வலியுறுத்திக் கூறுவதேன்?

அதில்... உற்சாகம் துள்ளும் சுவை மட்டுமல்ல. காட்பரிஸின் பிரபல பெயர் மட்டுமல்ல. அவற்றைவிட அதிகமே அதிகம். அதுதான் போர்ன்விடா! அதோடு வளருங்கள்.

காட்பரிஸ்

**போர்ன்விடா**

நல்ல வளர்ச்சி,
போர்ன்விடா பயிற்சி.



குறளோவியம்

# கலைஞர் பெற்றெடுத்த குழந்தை

"பத்து மாதம் சுமந்து குழந்தையைப் பெறுவாள் தாய். அந்த குழந்தையைப் பார்க்க, உற்றாரும், உறவினரும் வருவார்கள். குழந்தையைக் கிள்ளி, மகிழ்ந்து, பாராட்டிவிட்டுப் போவார்கள். அவ்வாறு வருபவர்களிடம் அந்தத் தாய், குழந்தையைப்பெற்றெடுக்கத் தான் எவ்வளவு கஷ்டப் பட்டேன் என்று சொல்லிக் கொண்டிருக்க மாட்டாள். குழந்தையை ஈன்றெடுத்த களைப்புடன் இருக்கும் அவள் புன்னகையை மட்டும் வீசுவாள். அதுவும் யாரை நோக்கி? தான் ஈன்றெடுத்த குழந்தையை நோக்கித் தான். அதேபோல்தான் நான் பெற்ற (எழுதிய) இந்தக் குழந்தையை (குறளோவியத்தை) எல்லோரும் பாராட்டினீர்கள்; வாழ்த்தினீர்கள். ஆனால் நான், நிஜக்குழந்தையைப் பெற்ற தாயின் களைப்புடன், இருக்கிறேன். எல்லோரும் பாராட்டும் போது குழந்தையை நோக்கி தாய் புன்னகையை வீசுவாளே அதுபோல் என் குழந்தையைப் (குறளோவியத்தை) பார்க்கிறேன். புளகாங்கிதம் அடைகிறேன்" – இவ்வாறு நன்றி கூறிவிட்டு அமர்ந்தார் 'குறளோவிய'த்தை எழுதிய கலைஞர்.

**பா**ரதி பதிப்பகம் (சென்னை–17) வெளியிட்டுள்ள இந்த நூலின் உரிமையாளர்கள் தமிழ்க்கனி பதிப்பகத்தார். அன்று தமிழ்க்கனி பதிப்பகம் சார்பில் வரவேற்றுப் பேசும்போது செல்வி கனிமொழி, "இந்த விழா நடத்துவதற்குக் கலைவாணர் அரங்கைக் கேட்டோம். ஆனால் இந்த மாதம் முழுவதும் காலியில்லை என்று கூறி விட்டார்கள். ஆனால் இரண்டு நாட்களுக்கு முன் முதல்வருக்கு உதவி செய்த டாக்டருக்குப் பாராட்டு விழா கலைவாணர் அரங்கத்தில் நடந்தது. அதற்கு மட்டும் எப்படித் தான் இடம் கிடைத்ததோ? சீப்பை ஒளித்து வைத்து விட்டால் கல்யாணம் நின்று போய்விடும் என்று நினைத்துக் கொண்டார்கள் போலும்" என்று ஆட்சியாளர்களைக் கிண்டினார்.

மிகவும் துணிவாகப் பேசுகிறாளே இந்தப் பெண்! யார் இவள்? என்று மக்கள் கூட்டம் புருவங்களை உயர்த்திய போது, அந்தப் பெண்ணே தொடர்ந்து பேசும் போது, "குறளோவியத்தை எழுதிய என் தந்தையார் அவர்களே" என்ற போதுதான் அந்தப் பெண் கலைஞரின் மகள் என்பது பலருக்குப் புரிந்தது. கரகோஷம் விண்ணைப் பிளந்தது.

அன்றைய விழாவில் எல்லோரையும் நெகிழச் செய்த நிகழ்ச்சி திருவள்ளுவரின் அரசு அங்கீகாரம் பெற்ற படத்தை வரைந்த வேணுகோபால் சர்மாவுக்குக் கலைஞர் செய்த மரியாதை. பக்கவாதத்தால் பாதிக்கப்பட்டு மிகவும் ஏழ்மையுடன் இருக்கும் சர்மாவை மேடையில் கௌரவப்படுத்தி

○ இடமிருந்து வலமாக கலைஞர், வ. சுப. மாணிக்கம் கே. பி. கந்தசாமி, சிதம்பரம்



யது மட்டுமின்றி, தமக்கு முன் பணமாகக் கொடுக்கப்பட்ட பத்தாயிரம் ரூபாயை சர் மாவுக்கு அன்பளிப்பாகக் கொடுத்த சலேருரின் பெருந்தன்மையைப் பாராட்டாதவர்கள் இல்லை.

அந்தக் காலத்தில் ஒரு புலவர் எந்த நூலை எழுதினாலும் கற்றறிந்த அறிஞர்களின் நடுவே அந்த நூல் அரங்கேற்றப்படுமாம். அதுபோல் தமிழ் கற்றறிந்த பெரும் புலவர்களின் முன்னிலையில் தமது குறளோவியத்தை அரங்கேற்றினார் சலேருர். பேராசிரியர் வ. சுப. மாணிக்கம், தெ. ராமலிங்கனார், மகாவித்வான் தண்டபாணி தேசிகர், டாக்டர் மெ. சுந்தரம், டாக்டர் தமிழ்குடிமகன் நன்னன் என்று அறிஞர் பெருமக்கள் நூலை வாழ்த்தி வரவேற்றனர்கள். இவர்களைத் தவிர, பத்திரிகை உலக ஜாம்பவான்களான சாவி, சாண்டில்யன், இலங்கைக் கவிஞர் காசி ஆனந்தன்.

நூலின் விலை 100 ரூபாய் என்றாலும் அன்று பேசியவர்கள் பெரும்பாலோர் 'இந்த நூல் நூறு ரூபாய்க்கு மேல் தரும்' என்றனர். உண்மையில் புத்தகம் என்ன, ''திருவள்ளுவர் கடவுளை ஒப்புக் கொண்டாரா, இல்லையா?'' என்ற பிரச்னையோடு ஆரம்பித்து எழுதியுள்ள முதல் அத்தியாயத்துக்கே நூறும் தரலாம், அதற்கு மேலும் தரலாம்! மற்ற அத்தியாயங்களை இலவச இணைப்பாகக் கருதலாம்! வெளியீட்டு விழா அன்றே நூறு ரூபாய் புத்தகம் 150 பிரதிகளுக்குமேல் விற்றது. சலேருரின் எழுத்து எந்த அளவு மக்களை ஈர்த்துள்ளது என்பதை விளக்கியது.

ஒவ்வொரு குறளுக்கும் சலேருரின் எளிய, ரசமான விளக்கங்கள், ஓவியர்கள் கோபுலு, உமாபதி ஆகியோர் வரைந்த அழகான படங்கள், இவை இணைந்த இந்த நூலில் 354 குறட்பாக்களுக்கு விளக்கம் தீட்டப்பட்டுள்ளது. இதில் இன்பத்துப் பாலிலிருந்து 141 குறட்பாக்களும், பொருட்பாலில் 137 குறட்பாக்களும், அறத்துப் பாலில் 76 குறட்பாக்களும் அடங்குகின்றன. பாடல் முதற்குறிப்பு அகராதி இணைக்கப்படாதது ஒரு குறைதான்.

'நிறை நீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின் நீர பேதையார் நட்பு.'

என்ற குறளுக்கு, நட்பின் பெருமையை விளக்கும் வண்ணம், ராஜாஜி அவர்களுக்கும் பெரியார் அவர்களுக்கும் இடையே இருந்த நட்பின் ஆழத்தைக் சலேருர் அவருக்கே உரிய பாணியில் விளக்கியிருப்பது அருமை.

30 ஆண்டுகளுக்கு முன் ஆரம்பித்த இந்த குறளோவிய முயற்சி பற்றித் தெரிவித்தார் சலேருர். ''தமைக் காத்த தலைவன் தனக்காகக் கண்ணீர் சிந்துமளவுக்கு ஏற்படுகின்ற களச் சாவினை வீரர்கள் யாசித்தாவது பெற வேண்டும்'' என்ற பொருளிருக்கும் குறள் தான் சலேருர் முதலில் எழுதியது. தலைவர் அண்ணா அவர்கள், நியாயமாகத் தான் இறந்த பிறகு, தனது கல்லறையில் கண்ணீர் சிந்தும் பேறு தான் பெறவேண்டுமென்ற அவா மிகுதியால் எழுதப்பட்டதாம். குறளோவியப் புத்தகத்தின் கடைசி குறள் 'நேற்றிருந்தவர் இன்றில்லை' என்பதை விளக்கும் குறள். முடிவு, துக்ககரமாக நம்பிக்கையற்ற தன்மையைப் பிரதிபலிப்பதாக இருக்கிறது என்பதை உணர்ந்த சலேருரின் ஆசிரியர் மகாவித்வான் தண்டபாணி தேசிகர் தொடர்ந்து எழுதி மங்களகரமாக முடிக்கும்படி சலேருரைக் கேட்டுக் கொண்டிருக்கிறாராம். சலேருரும் சரி என்று கூறியிருக்கிறாராம். அது நம் பாக்கியம்.

—பரியன்

## அருள்வாக்கு

பட்டைப் பற்றி என் அப்பிராயத்தைச் சொல்லவேண்டும். அது உங்களுக்கே தெரிந்திருக்கும். ஒரு முழப்பட்டுக்காக நூற்றுக்கணக்கில் பட்டுப்பூச்சிகளைக் கொல்ல வேண்டியிருக்கிறது. இதனாலே ''அஹிம்ஸா பரமோதர்ம'' என்கிற பெரிய ஆசாரத்துக்குப் பங்கம் வந்து விடுகிறது. அதுவும் தவிர பட்டு விலையும் ரொம்ப ஜாஸ்தியாயிருப்பதால் பட்டுப்புடவை மோஹத்தால் குடும்பப் பொருளாதாரமே சீர்கெடுகிறது. இதிலே வசதி இருக்கிறவர்களைப் பார்த்து, வசதியில்லாதவர்களும் 'காப்பி' பண்ணப் பார்ப்பதால் ரொம்பவும் கஷ்டம், கடன், கஷ்டி உண்டாகிறது. இந்தக் காரணங்களை உத்தேசித்து நான் பட்டு கூடாது என்றுதான் சொல்லிக்கொண்டு வருகிறேன். ரொம்ப அத்தியாவசியமானால் வெளிநாட்டுலோ மழைக்காலத்தில் நான் கணக்காகப் பெய்து கொண்டிருப்பதால் வஸ்திரம் காயாது என்பதாலோ மடி வஸ்திரம் எப்போதும் ரெடியாய் இருந்தால் நல்லது என்றால் அப்போது 'அஹிம்சாப்பட்டு' என்பதாகப் பூச்சியைக் கொல்லாமலே நெய்கிற பட்டு வஸ்திரங்களை உபயோகப்படுத்தலாம். வழக்கமான பட்டின் 'நைலான்' 'ஷைனிங்' எல்லாம் அஹிம்சாப்பட்டுக்கு இல்லைதான். என்றாலும் ஜீவ காருண்யத்தை உத்தேசித்து இதைத்தான் உபயோகப்படுத்தவேண்டும்.

-ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி
சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராசார்ய ஸ்வாமிகள்



# எப்போதும் புன்சிரிப்பு

## டி. டி. வாசு



○ ஸ்ரீ காமராஜ், ஸ்ரீ டி. எஸ். கிருஷ்ணா ஆகியோருடன் டி. டி. வாசு.

"என்னுடைய புனைபெயரையே சூடி "கல்கி" என்ற பெயரில் பத்திரிகை ஆரம்பிக்கப் போகிறேன்" என்று ராஜாஜியிடம் சொன்னார் "கல்கி" கிருஷ்ணமூர்த்தி.

"எதற்கு? வேண்டாம்! சிரமப்படுவாய்" என்றார் ராஜாஜி.

"கல்கி"க்கு ஒரே சந்தோஷம்! ஏனென்றால் ராஜாஜி எப்போது 'வேண்டாம் என்று சொல்லி விட்டாரோ அப்போதே அதற்கு ஆசீர்வாதம் கிடைத்த மாதிரி! அமோகமாகப் பத்திரிகை நடக்கும் என்பது அந்தக் கணமே உறுதியாகி விட்டது!

இந்த ரகசியம் டி. டி. கே. அவர்களுக்கும் தெரிந்திருக்க வேண்டும். "தொழிலை விட்டுவிட்டேன். சுதந்திரப் போராட்ட அரசியலுக்கு வந்துவிடப் போகிறேன்" என்றார் ராஜாஜியிடம்.

"எதற்கு வேண்டாம்! வசதியாக இருக்கிறாய். கெடுத்துக் கொள்ளாதே" என்றார் ராஜாஜி.

அப்போதே வர்த்தகத்தை நம்பிக்கையான பிறரிடம் ஒப்படைத்து விட்டுத் தம்மை அதிலிருந்து துண்டித்துக் கொண்டு அரசியலுக்கே தம்மை முழுமையாக அர்ப்பணித்துக் கொண்டார் டி. டி. கே. வியாபாரமும் சரி, டி. டி. கே. யின் அரசியல் வாழ்க்கையும் சரி, பிரமாதமாக உயர்ந்தன!

சுதந்திர பாரதத்தில் டி. டி. கே. யின் தியாகத்தோடு அவரது அறிவுக் கூர்மையும் நேருஜி, ராஜாஜி, காமராஜ் போன்ற பெருந்தலைவர்களால் உணரப்பட்டது. அவருக்குப் பெரிய பெரிய பொறுப்புக்கள் வந்து சேர்ந்தன.

இதனால் டி.டி.கே. நிறுவனத்துக்கும் வசதியாக இருந்திருக்கும் அதன் வளர்ச்சிக்கு அவர் உதவியிருக்க முடியும் என்றுதான் பலர் எண்ணுவார்கள். ஆனால் உண்மை இதற்கு நேர்மாறானது.

"அப்பா பெரிய பதவிகளில் இருந்ததாலேயே இந்த நிறுவனத்துக்கு ரொம்பக் கஷ்டம். அவரையும் நெருங்க முடியவில்லை. அவர் பெயரைத் தாங்கி நின்று அவருடைய உறவினர்களால் நடத்தப்படுகிற நிறுவனம் என்பதால் அரசாங்கத்தில் வேறு யாரையும் அணுகுவதற்கும் தயக்கமாயிருந்தது" என்கிறார் திரு. டி. டி. வாசு. ஒருசமயம், "இந்தக் காரியத்தில் டி. டி. கே. குடும்பம் ஈடுபட்டிருக்கிறது என்பதற்காக இந்த ஃபைல் என்னிடம் வரவேண்டுமா?" என்று பிரதமர் நேருஜி 'நோட்' எழுதினாராம். அவ்வளவு நம்பிக்கை அவருக்கு டி. டி. கே. யிடம்.

பல உள்நாட்டு, அயல்நாட்டுப் பொருட்களுக்கு ஏஜென்ஸி எடுத்து வர்த்தக நிறுவன

ஸ்ரீ டி. டி. நரசிம்மன்



✕ ஸ்ரீ டி. டி. வாசு



மாக மட்டும் இருந்த டி. டி. கே. கம்பெனி தொழில் துறைக்குத் திரும்ப முக்கிய காரணமாயிருந்தவர் டி. டி. நரசிம்மன். வாட்டர்மேன்ஸ் இங்க், பேனா இவற்றைத் தருவித்து வியாபாரம் செய்து வந்தவர்கள், அவற்றை இங்கேயே தயாரிக்கத் தொடங்கினார்கள். முதல் தங்க நிப் பேனா இவர்களுடையதுதான். ஆனால் சராசரி இந்தியன் தங்க நகைக்குத்தான் ஆசைப்படுவானே யொழிய தங்க நிப் அனாவசியம் என்று கருதுவான் என்பது விரைவிலேயே புரிந்தது. ஆனால் இதற்குள் நிறுவனம் வேறு பல துறைகளில் கிளை விட்டுப் படர ஆரம்பித்து விட்டது. இன்று ஆலமரமாகத் தழைத்து நிற்கிறது. அதன் வளர்ச்சி குறித்து திரு. டி. டி. வாசு அவர்களிடம் கேட்டோம்.

**டி.டி.கே. நிறுவனத்தின் ஆரம்பம் எப்படி?**

வாட்டர்மேன்ஸ் இங்க்தான் எங்கள் தொழில் வளர்ச்சியின் முதல் கட்டம். 1954—ல் பெங்களூரில் தொடங்கியது. 1955—ல் 'பாண்ட்ஸ்' அழகுச் சாதனங்கள். (''ராமாயண காலத்தில் எல்லாம் சீதா பிராட்டி என்ன, மேக்கப்பா செய்து கொண்டார்?'' என்று ராஜாஜி கேட்டாராம்!) 56'ல் ப்ரஸ்டீஜ் பிரஷர் குக்கர்;



○ ஸ்ரீ டி. டி. கே.



✕ வாசுவின் குடும்பம்

58—ல் டி.டி.கே. பார்மா மருந்துகள்; 63—ல் குடும்பக்கட்டுப்பாட்டுச் சாதனமான ட்யூரக்ஸ்; அதே வருடத்தில், சென்னை பல்லாவரத்தில் புதிய 'பாண்ட்ஸ்' தொழிற்சாலை துவக்கம். (பின்னால் பாண்ட்ஸ் நிறுவனமே நிர்வாகத்தை ஏற்றுக்கொண்டு விட்டது.) 64—ல் தமிழ்நாடு பிரிண்டர்ஸ், 67—ல் விருதுநகரில் பேப்பர்கோன் பாக்டரி; அப்புறம் சுவர்க்கடிகாரங்கள் தயாரிப்பு... டான்டெக்ஸ் ஃபாக்டரி தஞ்சாவூரில்... வருஷா வருஷம் வளரும் கம்பெனி இது!

**இந்த வளர்ச்சிக்கு அடிப்படைக் காரணம் என்ன?**

டீம் ஒர்க்தான். அதிலும் அண்ணா டி.டி. நரசிம்மனின் சலியாத உழைப்பு. ஸ்ரீமதி பத்மா நரசிம்மன், நான் எல்லோருமாக அண்ணாவுக்குக் கொடுத்த முழு ஒத்துழைப்பும் ஓரளவுக்குக் காரணம்.

**இவை மட்டும்தானா வெற்றிக்குக் காரணங்கள்?**

தொழிலாளர்களுடனிருந்த சுமுகமான உறவு. ஒன்றரை வருடங்களுக்கு லண்டன் ரப்பர் கம்பெனி மூடப்பட்டிருந்தது. ஆனால் அதே தொழிலாளர்கள், ஒன்றரை வருஷங்களுக்குப் பிறகு அப்படியே வந்து சேர்ந்தார்கள்! எனக்கு எல்லாத் தொழிலாளர்களின் முகமும் பெயரும் அத்துப்படி.

○ அமெரிக்கத் தூதுவர் மொய்னிஹானுடன் இந்திய அமெரிக்க வர்த்தக சபையின் தலைவர் டி. டி. வாசுவும் தொழில் அதிபர்களும்



அவர்களுக்கான நல்வாழ்வுத் திட்டங்களை நிறைய நிறைவேற்றிய நிறுவனம் இது.

குடும்பக்கட்டுப்பாடு என்பது அருவருக்க வேண்டிய, வெட்கப்பட வேண்டிய விஷயமில்லை என்பதை உணர்த்தி, கு. க. சாதனத்தைத் தயக்கமின்றி மக்கள் ஏற்குமாறு முதன் முதலில் முயற்சி எடுத்து வெற்றி பெற்றது டி. டி. கே. நிறுவனத்தின் ஓர் அங்கமான லண்டன் ரப்பர் கம்பெனிதான். இந்த நிறுவனத்தில் யூனியன் இல்லை என்றாலும் வேறு பல டி.டி.கே. நிறுவனங்களில் யூனியன் உண்டு. வஞ்சனையில்லாமல் வகைக்கு ஒன்றாக எல்லாக் கட்சி யூனியன்களும் இருக்கின்றன!

**உங்கள் குடும்பத்துக்கு நேருஜி, காமராஜர் தொடர்பு உண்டே...?**

நேருவின் கனவுகளை நனவாக்க, திட்டங்களை உருவாக்கியவர் அப்பா. காமராஜரிடமும் அப்பாவுக்கு இருந்த ஆழ்ந்த நட்பும் மரியாதையும் அளவிட முடியாது. இன்றைக்கு பாலமந்திர் இல்லம் காமராஜரின் இன்னொரு நினைவாலயமாகத் திகழ்கிறது. அநாதைக் குழந்தைகளின் நல்வாழ்வுக்காக, அன்றைக்கு சமூக சேவகி ஸ்ரீமதி மஞ்சுபாஷிணி துவக்கி வைத்த இந்தக் குழந்தைகள் இல்லத்தின் நலனில் காமராஜருக்கு இருந்த ஆர்வம் சொல்லி முடியாது. திரு. டி. எஸ். கிருஷ்ணா மூலமாக நானும் இதில் சேர்க்கப்பட்டேன். அப்பாவுக்கும், காமராஜருக்கும் இடையே இருந்த நட்பின் காரணமாக இந்த நிறுவனத்தின் நலனில் அக்கறை எடுத்துக் கொண்டு என்னால் இயன்றதைச் செய்து வருகிறேன். இன்னி டென்ட்லி, காமராஜரின் முழு உருவச்சிலை ஒன்று துணை ஜனாதிபதி திரு. ஆர். வி. அவர்கள் இல்லத்தில் தற்போது வைக்கப்பட்டிருக்கிறது. புதுதில்லி ட்யூப்ளே சதுக்கத்தில் சீக்கிரமே வைக்கப்படும். முன்னாள் பிரதமர் இந்திரா, சிலைக்கு மாலையிட்டு மரியாதை செலுத்த வருவதாக இருந்தார்... இப்போது அவர் மகனை அழைக்க வேண்டிய நிலை...

---

அரசாங்க செலவிலேயே வாழ வேண்டுமென்று ஒவ்வொருவரும் விரும்புகின்றனர். ஆனால், ஏனோ அவர்கள் தங்கள் செலவில்தான் அரசாங்கம் வாழ்கிறது என்பதனை மறந்து விடுகின்றனர்.

—பிரெஞ்சுப் பொருளாதார நிபுணர்
—பாஸ்டியா.

அனுப்பியது: பத்மாவதி சங்கர்.




**மாம்பலத்தில் பப்ளிக் ஹெல்த் சென்டர் துவக்கவும் உங்கள் தகப்பனாரின் பங்கு இருந்திருக்கிறது போலிருக்கிறதே?**

எஸ்... அதில் ஒரு சின்னக் கதை இருக்கிறது. டி.டி.கே. தேர்தலுக்கு நிற்கத் தீர்மானித்தபோது, மாம்பலம் பகுதிகளில் வீடு வீடாகப் போய் ஓட்டுக் கேட்டார். பல வீடுகளில் நோய்வாய்ப்பட்ட குடும்பங்கள்... வைத்திய வசதிக்கு வழியில்லாத குடும்பங்கள். கூட வந்திருந்தவர்களிடம், 'இதென்ன, எந்த வீட்டுக்குப் போனாலும் ஏதாவது வியாதியில் சிக்கித் தவிக்கிறார்களே! இவர்களுக்கு வைத்திய வசதி ஏதாவது செய்து தருவது நமது கடமை இல்லையா? நான் தேர்தலுக்குப் பிறகு டெல்லி போய் விடுவேன். நீங்களும் உங்கள் வேலையைப் பார்த்துக் கொண்டு போய் விடுவீர்கள். இவர்களுக்கு வைத்திய உதவி செய்தால், அதுதான் இங்கே இருக்கிற சாதாரண மக்களுக்கும் நமக்கும் நிலையான தொடர்பாக இருக்கும்!' என்றார் டி.டி.கே. பலன்: பப்ளிக் ஹெல்த் சென்டர்.

**பாலமந்திர், பப்ளிக் ஹெல்த் சென்டர் ஆகியவற்றில் உங்களுக்கு உள்ள ஈடுபாடு புரிகிறது. அதே மாதிரி இப்போது மியூசிக் அகாடமியிலும் உங்கள் பணி பளிச்சென்று தெரிகிறதே...?**

சங்கீதத்தில் அப்பாவுக்கு ஈடுபாடு மிகவும் உண்டு. எதில்தான் இல்லை? ஒரு சமயம் ஒரு தொழிலதிபர் தமது மோட்டார் கார் தொழிலகத்தில் உருவான முதல் காரை அப்பாவிடம் கொண்டு வந்து பெருமையுடன் நிறுத்தி ஓட்டிப் பார்க்கச் சொன்னார். அப்பா தாமே டிரைவர் ஸீட்டில் அமர்ந்து ஒரு சுற்றுச் சுற்றி வந்து அதன் சில குறைகளை உடனே பட்டியலிட்டார்! அசந்து போனார் தொழிலதிபர். இதேமாதிரி சங்கீதத்தையும் அலசுவார் அப்பா — எனவே மியூசிக் அகாதமி அமைப்பிலும் ரொம்ப சிரத்தை எடுத்துக் கொண்டார். அகாடமி அரங்கு நிர்மாணத்தில் அவர் யோசனைகள் பல ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளன. மத்திய அரசின் மானியம் கிடைக்கச் செய்தார். நேருஜியை அழைத்து வந்து காட்டினார். இப்போது இதன் தலைவராக என்னை ஏற்றுச் சிறப்பித்திருக்கிறார்கள். ஏற்கெனவே வழங்கப்படும் பரிசுகள் தவிர, சீஸனில் அகாடமியில் நடக்கும் கச்சேரிகளில், அப்பாவின் நினைவாகச் சில பரிசுகள் வழங்க ஏற்பாடு செய்திருக்கிறேன்.

**மறுபடி உங்கள் தொழில் வர்த்தக வட்டத்துக்குள் வருவதற்கு மன்னிக்கவும்... பேனா தயாரிப்புத் தொடங்க எது தூண்டியது உங்களை அன்று?**

நாடு சுதந்திரம் பெற்ற பிறகு அயல் நாட்டிலிருந்து இறக்குமதி குறைய வேண்

டும்; உள்நாட்டில் பொருள்கள் தயாராக வேண்டும் என்ற எண்ணம் மேலோங்கி அரசு இம்போர்ட் ரெகுலேஷன்ஸ் கொண்டு வந்தது. எங்களுக்கு ஒரு சௌகரியம். நாங்கள் ஏற்கெனவே அயல்நாட்டு நிறுவனங்களுடன் வர்த்தக ரீதியில் தொடர்பு கொண்டிருந்தோம். அந்த வர்த்தகத் தொடர்பைத் தொழில் நுணுக்கத் தொடர்பாக உருமாற்றுவதில் அண்ணா டி. டி. நரசிம்மன் பெரும்பங்கு வகித்தார். வளர்ச்சி படிப்படியாகத் தொடர்ந்தது.

**அடுத்து, ஒரு பெர்சனல் கேள்வி — உங்கள் மனைவி வெளிநாட்டுக்காரர்...**

ஆமாம். ஸ்மணு ஒரு ஸ்வீடிஷ் பெண்மணி.

**அவரை எங்கே சந்தித்தீர்கள்? வெளிநாட்டுக்குப் போயிருந்த போதா?**

இல்லை... டெல்லியில்தான். ஸ்வீடன் நாட்டுத் தூதரகத்தில் அவள் பணியாற்றி வந்தாள். ஒரு நண்பரின் வீட்டில் அவளைச் சந்தித்தேன். (மிஸஸ் ஸ்மணு வாசு யோகா—உடற்பயிற்சி வகுப்புகள் நடத்துகிறார்; வீட்டு அலங்காரக் கலை நிபுணரும் கூட. வாசுவின் இல்லமே இதை மெய்ப்பிக்கிறது.)

**உங்களுக்கு மிகவும் மன நிறைவளித்த வெற்றி என்று எதைக் குறிப்பிடுவீர்கள்?**

அடையாறு கேட் ஓட்டல் நிறுவியது. ஏனென்றால் இது மிகவும் சிரமப்பட்டுப் போராடிப் பெற்ற வெற்றி! அதைத் துவக்கத்தில் இருந்து உருவாக்கிய மனநிறைவு எனக்கு உண்டு. (வெல்கம் குரூப் நிர்வாகத்தினரிடம் சமீபத்தில் இது வந்தாலும், டி.டி. வாசு அதன் சேர்மன்.)

**தொழில் துறையிலும், பொது வாழ்க்கையிலும் இவ்வளவு பிஸியாக இருக்கிறீர்கள். இவற்றை எல்லாம் தூக்கி வீசிவிட்டு அக்கடா என்று இருப்போம் என்று அலுப்புடன் எப்போதாவது நினைத்ததுண்டா?**

நியாயமாக இப்படித் தோன்றக் கூடாது. ஆனால் தொழில் விஷயமாக டில்லிக்குச் சென்று சம்பந்தப்பட்ட அதிகாரிகளிடம் பேச்சு வார்த்தை நடத்திவிட்டு வரும்போது சில சமயம் அந்த அலுப்புத் தோன்றுவதுண்டு! சில சமயம் இந்த அலுப்பு சலிப்பே காரியத்தைச் சாதித்துத் தருவதும் உண்டு! ஒரு தடவை ''என்ன வாசு எங்கே இவ்வளவு தூரம்?'' என்றார் ஓர் உயர் அதிகாரி. ''உங்கள் நிறுவனத்தில் தொழில் வளர்ச்சிக்குக் கடன் கேட்டது ஒன்றுதான் நான் பண்ணிய ஒரே குற்றம்'' என்றேன். அந்தச் சலிப்பான பதில் மேலும் தாமதமின்றிக் காரியத்தை முடித்துத் தந்தது!

**வா**சு கல்லூரி நாட்களில் (லயோலா) ஏராளமாக ஆங்கிலப் படங்கள் பார்த்திருக்கிறார். ஆங்கிலத் திரைப்படங்களில் அன்றைக்குக் கொடிகட்டிப் பறந்த எர்ரால் ஃப்ளின் இவருடைய அபிமான நட்சத்திர



''அந்த நடிகைக்குத் தலைக்கனம் அதிகம்!''
''எப்படிச் சொல்றீங்க?''
''விக்'' வச்சிருக்கிறாங்களே.''
—பாரதிகுமார்.

மாக இருந்திருக்கிறார். ஃப்ளின் கிளப் ஒன்றைக் கூட (ரசிகர் மன்றம்) வாசு நடத்தியிருக்கிறார்! 'U' and the Movies என்ற சைக்ளோஸ்டைல்ட் இதழில் ஆரம்பித்து, அச்சிட்ட பிரதிகளாகவே பிறகு வெளியிட்டிருக்கிறார். அந்நாளில் பிரபலமாயிருந்த அத்தனை ஆங்கில — இந்தி நட்சத்திரங்களின் நல்வாழ்த்துக்களுடன் கையொப்பமிட்ட புகைப்படங்கள்... மை டியர்! வாசுதேவன் என்று தொடங்கி ஸிஸில் பி டி'மில்லி எழுதிய கடிதம்... எஸ். எஸ். வாசனின் செல்லக் கடிதம்... இதன் பழைய இதழ்களைத் தேடி எடுத்துக் கொடுக்கும்பொழுது, வாசுவுக்குப் பழைய நினைவுகள் குதூகலமாய்த் திரும்புகின்றன. ஐந்து ரூபாய் சந்தாவில், நூறு அங்கத்தினர்களுடன் ஃபிலிம் ஃபேன்ஸ் கிளப் நடத்தி 16 எம். எம். ஆங்கிலப் படங்களைத் திரையிட்டவர் வாசு! ஆனால் இப்போது சினிமா பார்க்க ஏது நேரம்? ''எப்போதாவது வீடியோவில் பார்ப்பேன்'' என்கிறார்.

சினிமா ஆர்வம் சினிமாப் பத்திரிகை நடத்துவதில் கிளைவிடக் கடைசியில் இந்தியன் எக்ஸ்பிரஸில் போய்ச் சேர்ந்தார்!

எப்படி?

அது ஒரு வேடிக்கை! கல்லூரிப் படிப்புக்குப்பிறகு டி. டி. கே. கம்பெனியில் முதலில் சேர்ந்தவர், அதன் ஜெனரல் மானேஜரிடம் சண்டை போட்டுக் கொண்டு டில்லிக்குச் சென்று விட்டார். அங்கே எக்ஸ்பிரஸ்ஸில் உதவி ஆசிரியரானார். ஒன்றரை வருஷத்துக்குப் பின் வாசு சென்னை திரும்பியபோது அந்த ஜெனரல் மானேஜர் வேலையைத் துறந்து போய் விட்டிருந்தார்!

இன்றைக்கு டி. டி. கே. நிறுவனம் பரந்து, விரிந்து, தலைநிமிர்ந்துநிற்கிறது. விநியோகத் துறையிலும், விற்பனைக்குப் பிறகு சர்வீஸ் என்ற முறையிலும் வணிக வட்டாரத்திலும் சரி, வாடிக்கையாளரிடமும் சரி, சபாஷ்களை வாங்கிக் குவித்து வைத்திருக்கிறது. இதையெல்லாம் விடப் பெருமையளிக்கும்விஷயம் ஒன்று உண்டு. அயல்நாட்டு தொழில் நுணுக்கத்தை ஏற்று இங்கே பல தொழில்களைத் தொடங்கி முன்னேறியவர்கள் இன்று வேறு

பல வளர்ச்சியடைந்து வரும் நாடுகளுக்குத் தொழில் நுணுக்கத்தை வழங்கி வருகிறார்கள் என்பதுதான் அது. பல நாடுகளில் தொழில் தொடங்க உதவும் ஒப்பந்தங்கள் கையெழுத்தாகியுள்ளன. தவிர, வருங்காலத் திட்டங்கள் பலவும் இருக்கின்றன.

வாசு தீவிர பக்தர். தமது வீட்டுக் காம்பவுண்டுக்குள்ளேயே அழகான கோவில் கட்டி வைத்திருக்கிறார். விநாயகர், துர்க்கை, தட்சிணாமூர்த்தி என்று அபூர்வ சிற்பங்கள். அவற்றுக்கு நித்திய பூஜை. மூல விநாயகருக்கு உற்சவரும் இருக்கிறார். பண்டிகையன்று பவனியும் வருவார், வீட்டுக் காம்பவுண்டுக்குள்ளேயே! வீட்டில் பூஜையறையும் ஒரு சிறு கோயில் மாதிரிதான் இருக்கிறது. இங்கு தினம், பத்து நிமிட தியானத்துடன் வாசுவுக்குத் தினம் பொழுது விடிகிறது.

மியூசிக் அகாடமியின் சமீபத்திய வளர்ச்சிக்கும் பொலிவுக்கும் வாசுவின் நேரடிப் பார்வையே காரணம். வீட்டுக்கு எதிரேயே இருக்கிறதால் சிந்தனை அதன் வளர்ச்சியிலே அதிகம் ஈடுபடுகிறதோ? ''சிமெண்ட் தளம் போட ஒவ்வொரு சிமெண்ட் கம்பெனியும் உதவியிருக்கிறது... ஜெனரேட்டர்கள் இரண்டு தொழிலதிபர்—நண்பர்கள் கொடுத்து உதவியவை!'' என்கிறார் நன்றியுடன்.

இந்தோ — அமெரிக்கன் சேம்பரின் அகில இந்தியத் தலைமைப் பதவி, 1970—ல் வாசுவுக்குக் கிடைத்தது. நான்கு முறை யு. எஸ். ஸுக்குத் தூதுக்குழுவில் சென்றிருக்கிறார். 'மத்தியில் புதிய தலைமை காரணமாகப் பெரிய மாறுதல்களைத் தொழில்துறை எதிர்பார்க்கிறது. டெக்னலஜி டிரான்ஸ்ஃபரில் இந்தியா பலவிதங்களில் பயனடையப்போவதாக நம்புகிறோம்' என்கிறார் உற்சாகமாக. ஆனால் அதேசமயம் தமிழகத்தின் தொழில் வளர்ச்சி போதிய அளவு சுறுசுறுப்பாயில்லை என்றும் தமிழக அரசு விழித்துக் கொள்ள வேண்டும் என்றும் கவலையுடன் பேசுகிறார்.

வாசுவின் எளிமையும், தோழமையுணர்வும் நமக்கு ஆச்சரியத்தை அளிக்கின்றன. இரண்டு தினங்களில் நடந்த மூன்று மணி நேரப் பேட்டிக்குப் பிறகு, ''இன்னும் ஏதானும் கேட்க வேண்டுமா?'' என்று புன்சிரிப்புடன் வினவினார் வாசு, சளைக்காமல்.

கவர்னர் மாளிகை விஜயம், அமெரிக்க தூதர் சந்திப்பு என்று டயரியில் நேரப்படி நிகழ்ச்சிகள் குறித்து வைத்திருக்கிற ஒரு பிஸி மனிதரைத் தாமதப்படுத்த விரும்பாமல் நன்றி கூறி விடைபெறுகிறோம். திரும்பும்போது —

'சராசரிக் குடிமகனுக்கே அன்றாட வாழ்க்கையில் நூறு பிரச்னைகள். இத்தனையெல்லாம் பொறுப்புகளைச் சுமந்து கொண்டிருக்கும் இந்த மனிதருக்கு எத்தனை கவலைகள் இருக்கும்? இருந்தும் எப்படி இவரால் சதா சிரித்துக் கொண்டே இருக்க முடிகிறது?' என்ற எண்ணம் எழுகிறது நம் உள்ளத்தில்.

ஒருவேளை அந்தச் சிரிப்பேதான் சிறப்புகளைக் கொண்டு வந்து குவிக்கிறதோ!

பேட்டி: சாருகேசி.

மேலட்டை. வண்ணப்படம்: **யோகா**

---

**சு**ற்றுலாக் கண்காட்சியில் சுற்றி வந்தோம். அந்த ஸ்டால் கண்களில் பட்டது. சினிமாவைப் பற்றிய கண்காட்சி.

''அட, அட, அட! நம்ம விஷயம்!'' என்று பரபரத்துக் கொண்டு உள்ளே நுழைந்தோம்.

சினிமா என்னும் ஜிகினா உலகில் நீண்ட காலமாக வேரூன்றியிருக்கும் ஃபிலிம் நியூஸ் ஆனந்தன் அமைத்திருக்கும் ஸ்டால் அது!

புகழ்பெற்ற முதல் பேசும் படத்தைப் பற்றிய அறிவிப்புடன் கூடிய பாட்டுப் புத்தகங்கள். ஆங்கிலத்தில் தமிழ்ச் சினிமாவிற்கு விளம்பரம். அந்த நாள் ஜாம்பவான்கள், ஜாம்பவானி(?)களின் ஸ்டில்கள் (எஸ்.டி. சுப்புலட்சுமி, பாகவதர், மீசையுள்ளவர்கள் பெயர்கள் — ஸாரி எங்களுக்கு முக்கிய தலைமுறையாதலால்மறந்து விட்டது), படமான நாவல்கள் அந்தக்கால அழைப்பிதழ்கள் என்று ஏகப்பட்ட விஷயங்கள் ரசிக்க.

நீடையரான பின்னல் நாற்காலியில் சாய்ந்து உட்கார்ந்து கொண்டு ஆரம்ப நாட்களில் எழுதிய டைரியைப் புரட்டிப் பார்ப்பது போல ஒரு உணர்வு.

சினிமாத் தொழிலில் என்னென்ன பிரிவுகள் என்று மூலையில் எழுதப்பட்டிருக்க, பார்வையாளர்களில் படிக்கத் தெரிந்தவர்கள் ரசித்தார்கள்; படம் பார்க்கும் நோக்குடன் நுழைந்தவர்கள் சூள் கொட்டினார்கள். நாங்கள் ரசித்தோம்.

**— ஜெயமன்மதன்**

## உள்ளே வாங்க சார் —

## படம் படிக்கலாம்!



## அறிமுகம் செய்பவர் சுஜாதா



# கொடுங்காளூர் வேணு!

தமிழ்க்கதைகளை அடிக்கடி மலையாளத்தில் மொழிபெயர்க்கும் வேணு கொடுங்காளூர் எல்லா திராவிட மொழிகளும் தெரிந்த மலையாளி. (கூடவே இந்தியும் ஆங்கிலமும்.) ''சேர நன்னாட்டிளம் பெண்களுடன் சுந்தரத் தெலுங்கினில் பாட்டிசைக்க'' இன்றைக்கு இவர் ஒருவர்தான் இருக்கிறார். தோணி கூட ஓட்டுபவர் போல நல்ல தேகக்கட்டு. மெலிதான குரல், ஹாஸ்ய உணர்ச்சி. கன்னடத்தில் நாடகம் எழுதியிருக்கிறார், நடித்திருக்கிறார். மலையாளக் குழந்தைகளுக்கு நூற்றுக்கணக்கான கதைகள் எழுதியுள்ளார். நான்கு திராவிட மொழிகளிலும் எழுதப் படிக்க, பேச, ஜோக் அடிக்கத் தெரிந்தவர். மற்ற மொழிகளின் பிரபல எழுத்தாளர்கள் பலரை மலையாளப் பத்திரிகை வாசகர்களுக்கு அறிமுகம் செய்திருக்கிறார். இவரே எழுத்தாளராக இருப்பதால் மொழி பெயர்ப்பில் செயற்கைத்தனம் எதுவும் இன்றிச் சரளமாகச் செய்கிறார். இவர் சாதனைக்கு ஏதாவது ஒரு மொழியின் அகாதமி பரிசு தர வேண்டும்; எந்த அகாடமி என்று யோசித்துக் கொண்டிருக்கிறார்கள் போலும்!

வேணு தம் சொந்த ஊரான கொடுங்காளூரில் தான் சிலப்பதிகாரம் எழுதப்பட்டது என்றும், கண்ணகிக்கு சேரன் செங்குட்டுவன் சிலை அமைத்துப் பெரிய பகவதி கோயில் கட்டியதையும் குலசேகர ஆழ்வார் முகுந்த மாலை எழுதினார் என்றும் சொல்கிறார்.

இவைகள் எல்லாம் இல்லாமலேயே கொடுங்காளூருக்குப் பெருமை இருக்கிறது!

—சுஜாதா



அம்மா: பையனைப் போட்டு இப்படி ஏன் அடிக்கறீங்க?

அப்பா: பின்னே என்ன? 6 மார்க் தானே வாங்கியிருக்கான்?

அம்மா: எந்தப் பாடத்தில்?

அப்பா: ஏழு பாடத்திலும் சேர்த்து!

—சிவசக்தி.


இந்தியப் பொருளாதாரம்
கறுப்புப் பணம்
ஒன்றும் கவலைப்படாதே!.. அங்குசம் தயாராகிக்கிட்டு இருக்குது!


எப்படியாவது ஆட்டி அசைச்சு விளக்கை எரிய வைக்கிறேன்!
தமிழ்நாடு மின்சக்தியில் தன்னிறைவு பெற நாம் முயலப் போவதாக ஜெயந்திமாலா கூறியுள்ளார்!


அங்கே என்ன வேடிக்கை பாக்கறீங்க, நான் சொல்றதைக் கேளுங்க!.. நாம ரெண்டு பேரும் படகிலே ஏறிந்து சுத்துனா எல்லாமே சரியாப் போயிடும்!



கல்கி

1985 மார்ச் 3
மலர் : 43 இதழ் : 31
ரக்தாக்ஷி மாசி 20



# நேரம் நெருங்கி விட்டது

இலங்கையில் நடப்பன தூக்கத்தை விரட்டுகிறது: உணவை வெறுக்கச் செய்கிறது. ஜெயவர்த்தன ஆட்சியால் விடுதலைப் புலிகளைக் கட்டுப்படுத்த முடியவில்லை என்பது மட்டுமல்ல, இலங்கை அரசினால் இலங்கை ராணுவத்தையே கட்டுப்படுத்த இயலவில்லை. விடுதலைப் புலிகளை வளைத்துப் பிடிக்கத் திராணியற்ற ராணுவம் அப்பாவித் தமிழர்களைப் பழி வாங்குகிறது. நள்ளிரவில் தமிழர் வீடுகளில் புகுந்து அடித்துக் கொல்லுகிறது: கற்பழிக்கிறது: கொள்ளையடிக்கிறது: அகதிகளாக அவர்கள் தமிழகத்துக்குத் தப்பி ஓடிவரச் செய்கிறது. இதையெல்லாம் வீடு, வாசல், சொத்து, உறவு எல்லாம் இழந்து அங்கிருந்து வருகிற பல்லாயிரக்கணக்கான அகதிகள் கண்ணீர்க்கதைகளாக வடிக்கிறார்கள். அயல்நாட்டுப் பத்திரிகைகளும் சான்று பகர்கின்றன.

அவ்வப்போது ஒருவரைப் புதுதில்லிக்குத் தூது அனுப்புவதைத் தவிர, தமிழகத்தில் விடுதலைப்புலிகளுக்குப் புகலிடம் மட்டுமின்றிப் பயிற்சி முகாமும் உள்ளதாகப் புரளி கிளப்புவதற்கு மேலாக, இரு நாட்டுக் கடற்படையினரும் சேர்ந்து ரோந்து சுற்றலாம் என்ற அபத்த யோசனைக்கு அதிகமாக ஈழத்திடமிருந்து உருப்படியான செயல்பாடு ஏதுமில்லை. இது ஆட்சியிலிருப்போரின் கையாலாகாத்தனம் என்பதாக மட்டும் எண்ணி நாம் ஏமாறத் தயாராக இல்லை. ஈழத் தமிழரைப் பூண்டோடு ஒழிக்கவும் விரட்டி அடிக்கவும் இட்டமிட்ட சதி நடக்கிறதாகக் கருத ஈழ அரசின் போக்கு இடமளிக்கிறது. இன வெறியர்களின் பிடியில் ஜெயவர்த்தன சிக்கி சக்தியற்றுப் போனதாக விருப்பு வெறுப்பற்ற பார்வையாளர்களே உறுதியாகச் சொல்கிறார்கள்.

ஆனால் நமக்கென்னவோ ஈழ அரசை விடவும் நமது மத்திய அரசின் மீதுதான் அதிகக் கோபம் வருகிறது. ஈழத்தமிழரின் துயர் துடைக்க இன்று வரை என்ன வன்மையான நடவடிக்கை எடுத்துள்ளது நமது மத்திய அரசு என்று பார்த்தால் உதட்டைப் பிதுக்க வேண்டியதாயுள்ளது. ''இலங்கை மீது படையெடுப்பது சாத்தியமில்லை'' என்று திரும்பத் திரும்பக் கூறி வருவதால் இலங்கை ராணுவத்துக்கு மேலும் துணிச்சலைத் தந்து, அராஜகத்துக்கு வழி வகுத்ததற்கு அதிகமாக மத்திய அரசு என்ன சாதித்துள்ளது? ''படையெடுக்கும் விருப்பமில்லை; ஆனால் அந்த நிர்ப்பந்தத்துக்கு எம்மை ஆளாக்காதீர்!'' என்று கூறினாலாவது கொஞ்சத்துக்குக் கொஞ்சம் பயமிருக்கும். பஞ்சாப், அஸ்ஸாம் என்று இங்குள்ள பிரச்னைகளை வைத்துப் பார்க்கும்போது தமிழ் ஈழம் கோருவோர் சார்பில் போராடப் படை அனுப்புவது அனுசிதமாயிருக்கலாம். ஆனால் இன்று ஈழத்தில் நடப்பது விடுதலைப்புலிகளுடன் போர் மட்டும் அல்ல; பாமரத் தமிழர் படுகொலையும் கூட என்பதை மறப்பதற்கில்லை. சரி, அதுதான் போகட்டும், வேறென்ன செய்தது புதுதில்லி? உலக அபிப்பிராயத்தை உருவாக்கியதா? ஐ. நா. சபையில் பிரச்னை வன்மையாகப் பேசப்பட்டதா? ஓர் அமைதிப்படையை ஐ. நா. சார்பில் அனுப்புமாறு கோரிக்கை பிறந்ததா? ஒரு மண்ணுமில்லை. ஈழத் தமிழர்களிடம் ஒற்றுமையை உருவாக்கவேணும் ஏதும் முயற்சி நடந்ததா? அவர்களை அழைத்துப் பேசி, வன்முறையையும் தனித்தமிழ் ஈழநாடு கோருவதையும் கைவிடுமாறு சொல்லப்பட்டதா? இருதரப்பு, முத்தரப்பு பேச்சு வார்த்தைகள் தொடர மனப்பூர்வமான தீவிர நடவடிக்கை எடுக்கப்பட்டதா? ஏதோ ஜி. பி. போனார் வந்தார், அமிர்தலிங்கம் சென்றார் திரும்பினார், முடிந்தது கதை என்று இருக்கிறது. இந்த ஏனோதானோ மனப்பான்மை மாறி, பிரச்னை தீர ராஜீவ் ஒரு கடுமையான பிரயாசையை அவசரமாக மேற்கொள்ள வேண்டும். முனைவாரா? ஏங்குகிறான் தமிழன்.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

# நீங்கள் கேட்டவை

○ எஸ். புஷ்பவனம், கிருஷ்ணபுரம்.
? இந்த வாரம் விவேகமானவர் யார்?

! எம். ஜி. ஆர். — அமைச்சரவையை அமைத்த விதத்திலும் ஜெயலலிதாவை அழைத்துப் பேசியதன் மூலமும் கட்சிக்குள் இருந்த சலசலப்பையெல்லாம் சட்டுப்புட்டென்று சரிக்கட்டிவிட்டாரே!

○ த. சத்தியநாராயணன், அவனியாபுரம்.
? கலைஞரிடம் உமக்குப் பிடித்தது அவரது கடமையா, கண்ணியமா, கட்டுப்பாடா?

! இம்மூன்றிலும் அவர் தவறிவிட்ட தருணங்கள் உள்ளதாக அவர் கருதாவிட்டாலும் பிறர் கருத இடமுண்டு. ஆனால் அவருடைய தமிழ்! அதன் உயர்வு பற்றி மாற்றுக் கருத்துக்கே இடமில்லை. எனவே, கலைஞரிடம் எனக்கு மிக அதிகமாகப் பிடித்தது அவரது தமிழ்.

○ அ. கஸ்ருல் ஜமால், திருமங்கலக்குடி.
? கர்நாடக மாநிலத்தில் ஒரே தொகுதியில் 307 வேட்பாளர்கள் போட்டியிடுகிறார்களே?

! தொந்தரவுதான். தொல்லைதான் பல விதங்களில். ஆனால் ஜனநாயகம் என்ற

## தமிழக முதல்வரைச்

பெரிய நன்மையை உத்தேசிக்கும்போது இது அற்பமானதாகி விடும். சிரமத்தைப் பொறுப்பது இலகுவாகிவிடும்.

○ எஸ். சௌரிராஜன், லெட்சுமாங்குடி.
? ஜெயலலிதாவின் திறமைக்கு ஒரு புதிய கட்சி உருவாகுமா?

! அதற்கெல்லாம் இடமில்லாதபடிமொத்த விஷயமும் சப்பென்று முடிந்து விட்டதே!

○ என். உலகநாதன், லால்குடி.
? பதவி இழந்த ஆறு மந்திரிகளைப் பற்றி...?

! ராகவானந்தம், ராதா தவிர பிறரைப் பற்றி அவர்கள் பதவியில் இருந்த போதே யாரும் கவலைப்படவில்லை. இப்போது என்ன பிரச்னை! கவனிக்கப்பட வேண்டியவர் ராகவானந்தம்.

○ எம். ஷர்புதீன், தோப்புத்துறை.
? மோகனதாஸின் பதவி மாற்றத்தை எம்.ஜி.ஆர். ரத்து செய்துள்ளது பற்றி...?

! எம். ஜி. ஆர். பதவி ஏற்றதும் பிறப்பித்த முதல் உத்தரவாகிய இந்தச் சம்பவம் 1. உடல் ஆரோக்கியத்தைத் திரும்பப் பெற்றது மட்டுமின்றி அவர் சிந்தனைத் தெளிவுடன் இருக்கிறார் என்பதை நிரு



கவனிக்கப்பட வேண்டியவர்



மீண்டும் அதே பதவி

பிக்கிறது. 2. யாரால், ஏன், எதற்காக மோகன்தாஸ் மாற்றப்பட்டார் என்பதற்கு எனக்கு விளக்கம் தரப்படவேண்டும் என்று உத்தரவிடப்பட்டதன் மூலம் முன்போலவே மன உறுதியுடன் இருக்கிறார் என்பதைக் காட்டுகிறது. 3. அ. தி. மு. க. அமைச்சரவையில் ஒற்றுமையில்லை, ஒருமித்த பார்வை இல்லை, அப்பிப்பிராய பேதங்களும் பொருளுமிடி மோதல்களும் நிறையவே உள்ளன என்பதைச் சுட்டுகிறது.

○ கப. மாரிமுத்து — பட்டி வீரன்பட்டி.
? தமிழக முதல்வரைச் சந்தித்தீர்களா?

! வலது கையால் கைகுலுக்கினார். அவர் கை பலம் முன்னிலும் அதிகமாகவே இருந்தது; என்னை நன்றாக அடையாளம் தெரிந்து கொண்டார்; உரக்கப் பேசாவிட்டாலும் பேச்சு தெளிவாக இருந்தது... திரும்பத் திரும்ப இந்த வசனத்தையே கூறுவதற்காக அவரைச் சந்தித்துத் தொந்தரவு செய்ய வேண்டாமே என்று இருந்து விட்டேன்!

○ ஆர். சிவசுப்பிரமணியன், நாகப்பட்டினம்.
? கங்கையைத் தூய்மைப்படுத்த முடியுமா?

! மனமிருந்தால் மார்க்கமுண்டு. அமெரிக்காவில் இல்லாத தொழில்வளமா? அங்கு சுற்றுச் சூழலின் தூய்மை பற்றிய விழிப்புணர்ச்சி தீவிரமாக ஏற்பட்டுச் செயலாக்கம்தான் ஆகிறது. நதிகளையெல்லாம் பரிசுத்தப்படுத்தி விட்டார்கள். லண்டனின் சாக்கடை என்று கருதப்பட்ட தேம்ஸ் நதியையே சுத்தப்படுத்தி விட்டார்கள்! நம்மால் முடியாதா என்ன!

○ சமஅந்தஸ்து!



○ தலைகுனிவு





○ தமிழைக் காப்பாற்ற.



○ தலைமைப் பாணி

○ இங்லியார், சென்னை—1.
? ஆங்கிலத்திடமிருந்து தமிழைக் காப்பாற்றுங்கள் என்று ம. பொ. சியும் வீரப்பனும் பேசியதை ஜோக்காக ரசித்ததாகக் கூறும் தராசுவே, தமிழ்த் தாய் ஆங்கிலக் கள்வனிடம் சிக்கித் திணறிச் சின்னாபின்னப்பட்டுச் சிதைந்துகொண்டிருப்பதை நீ அறியவில்லையா?

! முன்பு தமிழை ஹிந்தியிடமிருந்து காப்பாற்றுங்கள் என்று கூறி வந்தோம். இப்போது தமிழை ஆங்கிலத்திடமிருந்து காப்பாற்றுங்கள் என்கிறோம். உண்மையில் தமிழைத் தமிழ்த் தீவிரவாதிகளிடமிருந்து தான் காப்பாற்ற வேண்டும். நாம் ஹிந்தியையும் ஒதுக்கி, ஆங்கிலத்தையும் விலக்கி விட்டால் கிணற்றுத் தவளைகளாகிப் போவோம். இப்போதே பள்ளி, கல்லூரிகளில் ஆங்கிலத்தின் தரம் பரிதாபத்துக்குரியதாய் உள்ளது. தமிழ் வளர, தமிழன் உயர ஆங்கிலத்தின் துணை நமக்கு வேண்டும்.

○ எம். ராஜேந்திரன், லால்குடி. ★
? வெளிநாட்டு உளவாளிகளைக் கண்டுபிடிக்க மறைந்த இந்திராகாந்தி ஆட்சிக் காலத்தில் முடியவில்லையே, ஏன்?

! பல நாள் திருடன் ஒருநாள்தானே அகப்படுவான்! அந்த ஒருநாள் இவ்வளவு காலதாமதமாக வருவானேன் என்றால்...

○ இவர் ஒரு டைப்





தலைமையில் தூய்மை வேண்டும், எளிமையும் வேண்டும், யாரும் அணுகி மனம் விட்டுப் பேச அஞ்சாத விதமாகத் தலைவர் நடந்து கொள்ள வேண்டும். அவ்வாறின்றி நான் சொன்னதைக் கேட்டு நட என்று உத்தரவிடுவதே தலைமையின் பாணி என்றால் கிட்ட நெருங்கவே பயப்படுவார்கள். பல விஷயங்கள் அவருக்குத் தெரிய வராமலே போய்விடும்...

○ நெல்லை சங்கரன், திருநெல்வேலி.
? வில்லன் கேரக்டருக்குப் பொருத்தம் ராதாரவியா, சத்யராஜா?

! கொஞ்சம் முரட்டுத்தனம், கொஞ்சம் கர்ண கடூரம் டைப் வில்லன் ராதாரவி. மென்மை, கூட இருந்தே கழுத்தறுக்கும் சாகசம் — இந்த டைப் வில்லன் சத்தியராஜ். உங்களுக்கு எந்த டைப் பிடிக்குமோ ஏற்கவும்.

○ கே. ஜி. எஸ்ப் பழனிச்சாமி, பெங்களூர்.
? தியேட்டரில் படம் முடிந்ததும் தேசிய கீதம் ஒலிபரப்பச் சட்டம் இயற்றினால் என்ன?

# சந்தித்தீர்களா?

! தேச பக்தியை சட்டம் போட்டு ஊட்ட முடியாது...

○ எம். ஏ. பாஷா, சின்னசேலம்.
? ஓசை ஷாலினி, பந்தம் ஷாலினி — எந்த ஷாலினி டாப்?

! ஓசை ஷாலினிக்கு ஒரு அவார்டு வழங்கப்பட்டால் அதே கௌரவம் பந்தம் ஷாலினிக்கும் தரப்பட வேண்டும்.

○ முருக ஆறுமுகவேலன், பம்பாய்.
? போரில் சீனாவிடம் இந்தியா தோற்றதற்குக் காரணம் நம்பிக்கை துரோகம் என்று மாலன் கூறியுள்ளாரே — விவரம் என்ன?

! இந்தி — சீனி பாய் பாய் என்று சொல்லிக் கொண்டே இந்தியாவைச் சீனா தாக்கியதும் அதனை எதிர்க்கத் தயார் நிலையில் இல்லாது இந்தியா மோசம் போனதும் கிருஷ்ணமேனன் தலைகுனிவும் நேருஜியை இது பலமாகத் தாக்கி உடல் ஆரோக்கியத்தையே பாதித்ததும் — சமீபத்திய சரித்திரம்.

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:
எம். ராஜேந்திரன்,
19, சன்னிதித் தெரு,
லால்குடி—621 601.

தராசு

# உத்தர சிதம்பர நடராஜர் கோயில்

## — ஸதாரா

- சுபஸ்ரீ

பெரியவாளைப் பார்க்க ஒருநாள் ஒருவர் வந்தார். சுவாமிகளைத் தரிசித்து, நெடுஞ்சாண் கிடையாக விழுந்து, ரூ. 5 லட்சத்தைக் காணிக்கையாக வைத்தார். பெரியவாள் புன்னகை பூத்து, எடுத்துக் கொள்ள மறுத்து விட்டார். 'அது போதவில்லையோ' என எண்ணி, அடுத்த நாள் மேலும் இரண்டரை லட்சம் சேர்த்து 7.5 லட்சமாகச் சமர்ப்பித்தார் அம்மனிதர். சுவாமிகள் சிரித்தபடி, 'சந்நியாசி எனக்கு எதற்குப் பணம்...? அதை நீயே தர்மத்திற்குச் செலவழித்து விடு...' என்று அருளினார்.

பூனாவிலிருந்து 110 கி. மீ. தள்ளி ஸதாரா நகரத்தில், மலைகள் சூழ்ந்த ரம்யமான இயற்கை சூழ்நிலையில், ஸ்ரீ காஞ்சி காமகோடிப் பெரியவாள் 1980-ல் பதினொரு மாதங்கள் எழுந்தருளி இருந்த போது நடந்தது இது. அங்குள்ள பிரபல ரஜதாத்ரி (உடுப்பி) ஹோட்டல் அதிபர் சாமண்ணா தான் அந்த வள்ளல்.

இதற்கிடையில், 'இப்பிறவி எடுத்ததே சுவாமிகளுக்குக் கைங்கரியம் புரிய' என எண்ணி உழைக்கும் ஸ்ரீ சண்ணன், அவரது உறவினர் அவர் செலவுக்கென அளித்த ரூ. 1000-த்தைப் பெரியவாள் திருப்பாதங்களில் சமர்ப்பித்தார். அதை அப்படியே சாமண்ணாவிடம் கொடுக்கச் சொல்லி 'இதை வைத்துக் கொண்டு நான் சொல்லுகிற கோயிற்பணி ஆரம்பி' என்று பணித்தார் சந்திரசேகரர்.

அன்று பிறந்தது உத்தர நடராஜர் ஆலயம்.

ஸதாராவில் தென்னிந்தியச் சிற்பப்பாணியில் நடராஜருக்கு ஒரு ஆலயம் எழுப்ப சுவாமிகள் திருவுள்ளம் கொண்டார்கள். அவரது கட்டளைப்படி சாமண்ணா, குல்கர்னி முதலியவர்களை அழைத்துக் கொண்டு போய் சிதம்பரம் சபாபதி ஆலயத்தைக் காண்பித்தார், சண்ணன். அசந்து விட்டார்கள். ஆயுளில் இந்த மாதிரி ஒரு கோயில் கட்ட முடியுமா...? இந்த 7.5 லட்சம் எந்த மூலைக்கு...?

செகந்திராபாத்திலிருந்து ஆந்திர அரசில் ஆஸ்தான ஸ்தபதியான எழுவல் கோட்டை எஸ். எம். கணபதி வரவழைக்கப்பட்டார். பத்ராஜலம் பத்ரிநாத் கோயில் திருப்பணியிலும் பிட்ஸ்பர்க், நியூயார்க் ஆலயங்களிலும் அவரது கைவண்ணம் காணலாம். அவர் சிதம்பர நடராஜ ஆலயம் போல ஒரு மினி பிளான் தயார் செய்தார். அவரது தம்பி முத்தையா ஸ்தபதி, அமெரிக்க மண்ணில் பல இந்துக் கோயில்கள் எழுப்பிப் புகழ் பெற்றவர். அவரிடம் கட்டி முடிக்கும் பொறுப்பு ஒப்படைக்கப்பட்டது.

வட இந்தியாவில் தென்னிந்திய பாணியில் கோயில் கட்டலாமா? கன்னியாகுமரி முதல் கிருஷ்ணா நதி தீரம் வரை திராவிட பாணி அமைப்பைச் சிற்ப, ஆகம சாஸ்திரங்கள் அனுமதிக்கின்றன. ஆகவே கிருஷ்ணா நதிக்கு இக்கரை தேர்ந்தெடுக்கப்பட்டது. தென்னிந்திய சிற்பத் திறனை வடநாட்டில் போற்றுவதற்கு வாய்ப்பு.

ஆலய நிர்மாணத்திற்கு நிதி...? சாமண்ணாவிடம் ரூ. 7.5 லட்சத்திற்கு மேல்



கேட்கக் கூடாது என்று ஆச்சார்யாள் பணித்துவிட்டார். பிறகு? சுவாமிகளே வழி காட்டினார்.

''சிவாஜி, மகாராஷ்டிரம், கர்நாடகம், தமிழ்நாடு, ஆந்திரம் நான்கு தேசங்களையும் ஆண்டார். அவரது பிரதான நகரம் ஸதாரா. எனவே இங்கு நிர்மாணிக்கும் வட தில்லையம்பலத்தை யார் கட்ட வேண்டும் தெரியுமோ? இந்த நாலு மாநில அரசுகளும் ஆளுக்கு ரூ. 4 லட்சம் நன்கொடை தரவேண்டும்!''

ஆந்திரா அஞ்சய்யா ஆஹா என்றார்; வெங்கட்ராம ரெட்டி சாங்ஷன் செய்தார்; ராமராவ் காசோலை தந்தார். கர்நாடகத்தில் ஹெக்டேவிற்கு அந்தப் பெருமை; கோயில் நிர்மாணம் மகாராஷ்டிரத்தில், வஸந்தராவ் சும்மா இருப்பாரா..? அவரும் 4 லட்சம், தமிழ்நாடு மட்டும் பின் தங்குமா? எம். ஜி. ஆரும் தம் பங்கைச் செய்தார்.

கேரளா தன் பங்கிற்கு ரூ. மூன்றரை லட்சத்திற்கு 'ஒன்றும் இளாவிட்டு' மரச்சட்டங்களை அனுப்பி உதவிற்று.

கிராம்ப்டன் எலெக்டிரிக் கம்பெனி நரம்புகளில் பக்தி மின்சாரம் பாய்ந்ததோ, என்னவோ! ஆலயம் ஒளிவீசச் சகல எலக்டிரிக் சாமான்களையும் தந்துள்ளது. வி. சுவாமி நாதன் என்பவருக்கு வெள்ளை உள்ளம். ஆனால் கோபுரத்தை வண்ணத்தில் பார்க்க விரும்பினார். இந்தா பெயிண்ட் செலவு.

தாரா கோட்டை அருகே 4 ஏக்கர் நிலம் வாங்கினார் சாமண்ணா. நான்கு கோபுரங்கள், ஒரு குளம்.

ஆனந்த நடமிடும் சிதம்பரம் நடராஜர் போலவே பஞ்ச லோக விக்கிரகம் — இடது பாதம் தூக்கி நின்றபடி. சுற்றைச் சடைகள் காற்றில் பறக்காது. அரிகுழல் முதுகில் மறைந்து கிடக்கும். ஸ்வர்ண பைரவரும் உண்டு. மேலே தாமிர சபை (சிதம்பரத்தில் கனக சபை). 3 டன் தாமிரத் தகடு வேய்ந்த கூரை, கூத்தாடும் இறைவனுக்கு.

அடுத்து ஸ்ரீ மூலநாதர். சிவலிங்க உருவம், மூலவர்.

ராதாகிருஷ்ண சந்நிதி, கோவிந்தராஜருக்குப் பதில். அருகே மகாராஷ்டிரத்து பக்த விஜய மகான்கள். சமர்த்த ராம் தாஸ், ஏக்நாத், நாம்தேவ், துக்காராம்... உருவங்கள்.

விநாயகர் இல்லாமல் ஒரு வழிபாடா? எட்டரை அடியில் ஒரு பிள்ளையார், ஜம்மென்று காட்சியளிக்கிறார்.

சாமண்ணாவிற்குக் குருவிடம் பரம பக்தி. ஸ்ரீ காஞ்சிப் பெரியவாள் தங்குவதற்கு ஒரு மண்டபம் — ஜயந்தியை ஒட்டி மௌனத் தவத்தில் இருக்க ஒரு சுரங்க அறை. சுவாமிகள் அங்கேயே தங்க வேண்டும் என்று பிடிவாதம் பிடித்தார். பெரியவாள் மூன்று நாட்கள் மட்டும் எழுந்தருளிப் பக்தனது இஷ்டத்தை ஓரளவு பூர்த்தி செய்தார்.

சுவாமிகள் சதாராவை விட்டு நகர்ந்தது ஒரு கதை. திருமேனி புறப்பட்டால் பக்தர்கள் வழி மறைப்பு. தவச்சுடர் காசி சாஸ்திரிகளைக் கூப்பிட்டு, 'ஸந்யாச தர்மம் பற்றிக் கூறு...' என்றார். ''துறவிகள் ஒரே இடத்தில் தங்காமல் சஞ்சாரம் பண்ணிக் கொண்டே இருக்க வேண்டும்''. பக்தர்கள் வாயடைத்து விட்டனர். தண்டத்தைக் கைகளில் ஏந்தியவாறு, அந்த இளைத்த உருவம் மலையிலிருந்து தனித்து இறங்கிப் போய்க் கொண்டிருந்தது.



உருவாகி வரும் கோபுரங்களில் ஒன்று

எதிர்ப் பக்கம்: ஸதாராவில் உத்திர சிதம்பர நடராஜ ஆலயம் — நான்கு கோபுரங்களையும் காணலாம்.

கைங்கர்ய தாஸர்கள் ஓடோடிச் சென்று வணங்கினார்கள். ''ஸதாரா கோயிலில் எங்கு கிணறு தோண்டுவது? பூமி கர்ப்ப ஆராய்ச்சியாளர்களைக் கூப்பிடுவதா...?'' என்று கேட்டார்கள். மாமுனிகள் ஒரு இடத்தைக் காண்பித்து 'இங்கு தோண்டு' என்றார்கள். 20 அடியில் கிருஷ்ணாநதிநீர் குபுகுபு என்று பெருகிற்று.

நான்கு புறம் நான்கு கோபுரங்கள். தெற்கு, வடக்கு, கிழக்கு, மேற்கு கோபுரங்கள் முறையே தமிழகம், ஆந்திரம், கர்நாடகம், மகாராஷ்டிரம் என மாநிலங்களின் பெயர்களைத் தாங்கி நிற்கின்றன. அம்மாநிலங்களின் நன்கொடையில் எழுந்தவை அல்லவா...?

தமிழகத்தில் நான்கு கோபுரங்கள் கொண்ட திருத்தலங்கள் காஞ்சி, விருத்தாசலம், சிதம்பரம், திருவண்ணாமலை, மதுரை ஆகியன. ஆனால் இங்குள்ள கோபுரங்கள் வெவ்வேறு அரசர்களால் வெவ்வேறு காலங்களில் நிர்மாணிக்கப்பட்டன. ஆனால் ஒரே சமயத்தில் 62 அடி உயரத்தில் நான்கு கோபுரங்கள் கட்டப்பட்ட அதிசயம் இங்கு தான்.

சுமார் அறுபது தமிழக சிற்பிகள் ஓயாது உழைத்துக் கல்லிலே கலைவண்ணம் வடித்திருக்கிறார்கள்.

ஒரு முக்கியமான அம்சம் இப்போது பூர்த்தியாகி வருகிறது. ஆலயத்தின் உப பீடத்தில் 108 கரணங்கள் ஒவ்வொன்றும் ஒன்றரை × ஒன்றரை அடி சதுரத்தில் கல்லில் செதுக்கி வருகிறார்கள். இத்தகைய நாட்டிய நிலைகள் எந்தெந்த கோயில்களில் காணக் கிடைக்கின்றன? தஞ்சை பிரகதீஸ்வரர், கும்பகோணம் சாரங்கபாணி, சிதம்பரம் நடராஜா, திருவண்ணாமலை அருணாசலேஸ்வரர், விருத்தாசலம் விருத்தகிரி ஆகிய ஆலயங்களில்-முதல் இரண்டில் சிவன் – கரணங்கள் 31, 105 என்ற எண்ணிக்கையில். அடுத்த மூன்றில் பார்வதி – கரணங்கள் 108 × 4; 108; 102 × 4 என்ற எண்ணிக்கையில்.

ஸதாரா கோயில் திட்டம் அருமையானது. சிவனும் பார்வதியும் அடங்கிய 108 கரணங்கள், உரிய ஸ்லோகத்துடன் படைக்கப்படுகின்றன.

இதற்கு மட்டும் செலவு 4 லட்சம்.

முதல் காணிக்கை யார் தெரியுமா...? சங்கீத நாடக அகாதமியிலிருந்து தனக்குக் கிடைத்த பரிசு ரூ. 10,000–த்தை டாக்டர் பத்மா ஸுப்ரமண்யம் இந்தக் கைங்கரியத்திற்கு என சுவாமிகள் திருப்பாதங்களில் சமர்ப்பித்து விட்டார். இன்று நாட்டியக் கலை நாடெங்கும் பரவி இருக்கிறது. இந்த அரிய நிருத்திய சிலாசாஸனப் பணிக்குப் பல நாட்டியக் கலைஞர்கள் நிதி உதவி புரிய முன் வருவார்கள் என்பதில் ஐயமில்லை.

சாமண்ணா சென்ற ஆண்டு சிவபதம் அடைந்து விட்டார். இன்று அவரது புத்திரர்கள் இப்பணியைத் தொடருகின்றனர்.

சுவாமிகள் கட்டளையைச் சிரமேற்கொண்டு நிர்மாண வேலையை கருமமே கண்ணாக கிருஷ்ணா நதி தீரத்தில் ஒரு பக்தர் மேற்பார்வை பார்த்து வருகிறார். அவருக்குக் காசி காமகோடீஸ்வரன் ஆலயம், காலடி ஆதி சங்கரர் ஸ்தூபி (145 அடி உயரம்) ஆகியவற்றின் நிர்மாண வேலையை மேற்பார்வையிட்ட அனுபவம் உண்டு. உண்ணும் சோறும், பருகும் நீரும், காமகோடி கருணையே என எண்ணும் கண்ணன் அவர்.

ஸதாராவில் உத்தர சிதம்பர நடராஜர் கோயில் ஸ்ரீ காமகோடிப் பெரியவாளின் ஸதாரா விஜயத்திற்கு ஒரு நிரந்தர நினைவாகத் திகழ்கிறது.

டெல்லியில் ஒரு உத்தர ஸ்வாமி மலை. மேற்கே ஸதாராவில் ஒரு உத்தர சிதம்பர நடராஜர் ஆலயம். இவை காமகோடி பூஜ்யரின் திருவருள்.

ஏப்ரலில் கும்பாபிஷேகத்திற்குப் போகலாம் வாருங்கள்.

# பற்றுக்குறை

கோமகள்

**வா**ழ்க்கையில் ரமாவுக்கு ஏற்பட்டிருந்த பற்றுக்குறைகளால் அவளுக்கு ஏற்பட்டிருந்த சலிப்பும், விரக்தியும் கொஞ்ச நஞ்சமல்ல. சாதாரணப் புடவையும், சாயம் போன ரவிக்கையுமாய்த் தனக்குள் நொந்தவாறே அலமந்தைப்பட்டாள்.

இளநகையும், மென்மையான பேச்சுமாய் அவனது வாழ்வில் அவள் அடியெடுத்து வைத்தாள். அந்தநாள் ஒரு அழகான கனவாகத்தான் இருக்கிறது. ஆனால் இன்று...

அவள் முகத்தின் சிடுசிடுப்பு முக மினுமினுப்பைச் சாப்பிட்டு விட்டிருந்தது. கண்களில் ஒளியைக் கவலை கவர்ந்து கொண்டது. அவனுக்கு இசைவாக அடியெடுத்து நடந்து வந்தவள், ''வேண்டாம்! உங்கள் பாலைவனத்திற்குள் இருக்கும் சூடு என்னைத் தகிக்கிறது. உங்கள் கரடுமுரடான பாதை என் கால்களைப் புண்ணாக்கிவிட்டன'' என்று சொல்வதுபோல் தள்ளாடியவாறே பின்தங்கி விட்டாள்.

அன்பின் பரிமளங்களாகப் பிறந்த ராமுவும், சீதாவும் இன்று அவளை மகிழ்விக்கவில்லை. வறுமை அவள் நெஞ்சை வெறுமையாக்கி விட்டதால், குழந்தைகளுக்குக் கிடைக்க வேண்டிய அன்பும், பரிவும்கூட வறுமையாகி விட்டன



தவறு செய்த குழந்தைகளை நயமாகக் கூறித் திருத்த மாட்டாள் அவள். தண்டனையாக அடிகள் கிடைக்கும்.

''குழந்தைகளுக்குத் தவற்றைச் சுட்டிக் காட்டு ரமா...! நல்லதனமாக எடுத்துச் சொல்லு. இப்படி அடித்துக் கொல்லாதே... புரிகிறதா?'' என்று சில போது குத்தலாகக் கூறுவான்.

அவள் பதில் பேச மாட்டாள். நிமிரும் அவளது விழிகள் மட்டும் நீர் நிரம்பிப் பளபளக்கும்.

தன் வாழ்வில் மகிழ்ச்சி மலர்கள் சட்டென உதிர்ந்து போனதுபோல் இருந்தது. அவனுக்கு. ரமாவை எப்படிச் சந்தோஷமாக வைத்திருப்பது என்பது பற்றி அவன் யோசிக்காத நாளில்லை. ஆனால் எந்த வழியும் தோன்றவில்லை.

பாவம் ரமா! வெகுநாட்களுக்கு முன் எம்ப்ராய்டரி நூல் வாங்கி வரச் சொன்னாள். அது ஒரு வெட்டிச் செலவு என்று வாங்கிவர மறுத்துவிட்டான் மூர்த்தி.

அன்று வீடு திரும்பும்போது அதிக நேரமாகிவிட்டது. களைப்போடு உள்ளே நுழைந்த மூர்த்தி ரமாவின் முகம் சற்று நேரத்தில் மலரப் போவதை எண்ணிமகிழ்ந்தான். ஆம், அவனிடம் எம்ப்ராய்டரி நூலும், மல்லிகைப் பூவும், இருந்தன.

''வாங்க மாப்பிள்ளை! சௌக்கியமா?'' என்ற குரலைக் கேட்டதும் நிமிர்ந்தான். ரமாவின் அப்பா ராமதுரை!

''ஓ! வாங்க மாமா! எப்போது வந்தீங்க... லெட்டர் போட்டிருந்தா ஸ்டேஷனுக்கு வந்திருப்பேனே...''

''ஏன், உங்களைச் சிரமப்படுத்துவானேன்?... ரமாவோட அம்மாதான் தினசரி என்னை நச்சரிக்கறு. போய்ப் பெண்ணைப் பார்க்கலியே, பெண்ணைப் பார்க்கலியேன்னு ஒரே பல்லவி. ஒருமுறை குழந்தைகளை அழைச்சுக்கிட்டு ரெண்டு பேரும் திருச்சிக்கு வந்து போனால் தேவலாம்ங்கறது அவள் அபிப்பிராயம்'' தயங்கியவாறே தம் ஆசையை வெளியிட்டார் அவர்.

''நியாயமான ஆசைதான்! ஆனா பாருங்க, எனக்கு ஆபீஸ்லே லீவ் கிடைக்கிறது கஷ்டம். ஜனவரியிலே குழந்தைகளையும், ரமாவையும் அனுப்பி வைக்கிறேன். பத்து நாள் கழித்து நான் வந்து ரெண்டு மூணு நாள் இருந்துட்டு அவங்களை அழைச்சுட்டு வந்துடறேன்... நீங்க கொஞ்ச நாள் தங்கிட்டுப்போனா நன்னாக இருக்கும்...'' வேண்டுகோளாகக் கூறினான் மூர்த்தி.

''என் பேரக் குழந்தைகளைப் பார்த்ததும் என் மனசுக்கு அவங்களோடு பத்துநாளாவது தங்கிட்டுப் போனாத்தான் திருப்திப்படும் போலிருக்கு...'' என்று அவன் சொன்னதற்கு ஒப்புக்கொண்டார்.

''எப்பேர்ப்பட்ட குழந்தைகளம்மா! சிடுசிடுன்னு அவங்க மேலே எரிஞ்சு விழாதேம்மா... எத்தனை புத்திசாலிப் பசங்க... நல்லாப் படிக்கறாங்க...'' என்று பெருமையாக, பெருமிதமாகக் கூறிக்கொண்டே இருந்தார். அவரது பிரியத்தில் விசாலம் இவளையும் சிந்திக்க வைத்தது.

'ஆமாம்! அப்பா சொல்வது எத்தனை மெய்! ஒரு ஹோம் ஒர்க்குக்கு ஹெல்ப் பண்றேனா! ஸ்கூலுக்குக் கொண்டு விடறேனா? குழந்தைகளுக்கு ஜாலியா, பிஸ்கட்டும் வாங்கி அனுப்புகிறேனா? பாவம்! தன்னாலே படிச்சுக்கறதுகள்... எப்பேர்ப்பட்ட குழந்தைகள் மீது எரிந்து விழுகிறேன்... என் அலுப்பு, சலிப்புகளுக்கு ஏற்றவாறு புறக்கணித்தும், வசைபாடியும், அடித்தும் புண்படுத்துகிறேன். இந்த நினைப்பில் அவள் தூக்கம் வராமல் புரளும் போது மூர்த்தி வியப்போடு பார்த்தான்.

''ரமா! உடம்பு சரியில்லையா?''

''இல்லியே...''

''ரமா! வெகு நாட்களுக்குப் பின், நீ விடை கொடுத்து விட்டிருந்த மகிழ்ச்சியான நாட்கள் மீண்டும் புது வசந்தமாகப் பூத்திருக்கின்றன. இன்றைக்கு ஏதோ ஒரு குறை நெருடுகிறது போலிருக்குதே, பணப் பற்றாக்குறையா?'' மூர்த்தி எழுந்து தன் சட்டைப் பையிலிருந்து பத்து, பத்து ரூபாய் நோட்டுகளை எடுத்து அவள் கையில் வைத்தான்.

ரமா கேள்விக் குறியோடு கணவனைப் பார்த்தாள்.

''அப்பா இங்கு வந்திருக்கும்போது எந்த நமது சிக்கன நடவடிக்கையையும் அமுல் படுத்தாதே... அவரை நன்கு உபசரித்து, அவருக்குப் பிடித்தமானதை, வேண்டியதை நன்றாகச் செய் ரமா!'' நெகிழ்ச்சியோடு கூறினான் மூர்த்தி.

''கடன் வாங்கினீர்களா?'' என்று தொண்டை கமறக் கேட்டாள் ரமா.

''இல்லை ரமா! கடன் வாங்கறதுங்கறதைத்தான் வேண்டாம்னு வச்சிருக்கோமே. எங்க ஆபீஸ் மானேஜரோட குழந்தைகள் ரெண்டு பேருக்கும் பத்து நாளாக ட்யூஷன் சொல்லித் தரேன் ரமா!'' என்று சமாதானமாகக் கூறினான்.

---

''மகிழ்ச்சியோடு நாம் கற்பது ஒரு போதும் மறப்பதில்லை.''—ஏ.மெர்சியர்.

''நினைவுச் சின்னம் பெறத் தகுதி உடைய ஒருவருக்கு அதை வைக்க வேண்டிய அவசியமில்லை!''

—ஹாதார்ன்.

''செல்வத்தை அடையும் வழி, முக்கியமாக இரண்டு சொற்களில் அடங்கியுள்ளது: சிக்கனம், சுறுசுறுப்பு.

—ஃப்ராங்க்லின்

தொகுப்பு: நாமக்கல் ரமேஷ்குமார்.



அவனையே பார்த்துக் கொண்டிருந்த அவளது கண்களில் 'குபுக்'கென நீர் இரண்டு வழிந்து விடுவேன் என்று பயமுறுத்தியது. அவளது விழிநீரை வழிவதற்கு முன்பே தன் கைகளால் துடைத்துவிட்டான் அவன்.

அவன் அதிகப்படியாகக் கொண்டுவரும் பணம் பற்றாக்குறைக்கு ஒரு சிறு மாற்றாக அமைகிறது என்றாலும், அவன் களைப் படைந்து வருகிறான் என்பதைக் கண்கூடாகவே உணர்ந்து கொண்டாள் ரமா.

இளைத்துத் தூங்கிக் கொண்டிருந்த ரமாவை உலுக்கி எழுப்பிவிட்டது அந்த இருமல். அவள் சட்டென அவன் நெற்றியைத் தொட்டுப்பார்த்துவிட்டு, நெஞ்சில் கைவைத்துப் பார்த்தாள். ''உடம்பு சரியில்லையா?'' ஆதரவாக அவள் கை அவன் முகத்தை வருடுகிறது. வெகுநாட்களுக்குப் பின் கிடைத்த கனிவான அந்த உபசரணையில் அவன் இதமுற்றான்.

அடுத்த நாள் அவன் படுக்குமுன் அவனருகே பால் டம்ளர் நீண்டது. ''இது என் ரமா?''

''இருமிக் கொண்டிருக்கிறீர்களே... தினமும் இனிமேல் ஒரு டம்ளர் பால் குடித்து விடுங்கள்... நீங்கள் டியூஷனை நிறுத்திடுங்க. உங்கள் ஓய்வு நேரத்தை மற்றக் குழந்தைகளுக்குப் பாடம் சொல்லித் தருவதில் கழிக்க வேண்டாம். நம்ப குழந்தைகளோடு வீட்டுக்கு வந்து சந்தோஷமாகப் பொழுது போக்குங்களேன்...''

''கொஞ்சநாள் போகட்டும் ரமா! அந்தப் பணம் நமக்கு எவ்வளவோ உபயோகமாக இருக்கில்லே?''

''உங்க உடம்பு நல்லாயிருக்க வேண்டாமா? இருக்கறதை வைத்துக் குடும்பம் நடத்தலாம்...''

''இரண்டுநாள் பார்க்கலாம்... உடம்பு சரியாகிடும்.'' பிடிவாதமாக சமாளித்தான்.

ராமதுரை பதினைந்து நாட்கள் இருந்து விட்டு, ஊருக்குப் புறப்பட்டார்.

பேரக் குழந்தைகளுக்கு பைவ்ஸ்டார், சிக்லெட் வகையறாவுக்கென ஆளுக்கு ஐந்து ரூபாய் கொடுத்தார். ரமாவிடம், ''உங்கம்மா உனக்கென சேர்த்து வைத்த பணம் இது. உனக்குப் பிடிச்ச புடவையா எடுத்துக்கச் சொன்னாள்'' என்றவாறே இரண்டுநூறு ரூபாய் நோட்டுக்களைக் கொடுத்தார். அவர் குரலில் பாசத்தின் தழுதழுப்பு: அதற்குமேல் தரமுடியாத பலவீனம். அதுவே அவர் நிலைமைக்கு அதிகம்.

ஒருவாரம் ஆகியிருக்கும்.

ஆபீஸில் நடக்கப் போகும் ஒரு பார்ட்டிக்கு அவளும் வரவேண்டியிருக்கும் என்று மூர்த்தி கூறியிருந்தான்.

மூர்த்தியும், குழந்தைகளும் சென்றபின், ரமா கடைத்தெருவுக்குப் புறப்பட்டாள்.

அதோ, அந்தப் பெரிய ஜவுளிக்கடை வாசலில் விரித்துப் போட்டிருந்த புடவைகள் எல்லாமே அழகுதான்! அட்டைக் கவரில் பொருத்தப்பட்டிருக்கும் சின்னச்

## மறதியின் விளைவாக...



போட்டி : 44

மறதியின் விளைவாக ஏற்பட்ட துயரமான அல்லது நகைச்சுவையான அனுபவம் பற்றிக் கீழே வெற்றிடத்தில் எழுதி இந்த அரைப்பக்கத்தைக் கத்தரித்து அனுப்பவும். உறையின் மேல் ''மறதியின் விளைவாக...'' என்று குறிப்பிடவும். மறதியைத் தவிர்க்க நீங்கள் என்ன உபாயம் கடைப்பிடிக்கிறீர்கள் என்றும் எழுதலாம். பிரசுரமானால் பரிசு. தவிர குலுக்கல் முறையில் ஒருவருக்குப் பட்டு புடவை.

**முடிவு தேதி: 18-3-85.**

**இன்னும் 9 பட்டுப் புடவைகளே பாக்கி! இந்தக் கடைசி சில வார வாய்ப்புக்களைக் கைவிடாதீர்கள்!**

பட்டுப்புடவை பரிசுத் திட்டம்

என் பெயர் : ..................

விலாசம் : ..................

..................

சின்ன சட்டைகள், பிராக்குகள் தான் எத்தனை எத்தனை வகைகள்...!

இதோ, ஆடவர்களுக்கு உரிய ஏராளமான உடைகள், சட்டைகள், டைகள், பேண்ட் துணிகள் என்று... மெல்லிய வண்ணத்தில் வெள்ளியக் கலரில் அச்சிட்ட டெரிகாட் ஸ்லாக் அவனை மிகவும் கவர்ந்தது. அது மூர்த்திக்கு எடுப்பாக இருக்கும். ஆபீஸ் பார்ட்டியின் போது இந்தச் சட்டையைப் போட்டுக் கொண்டு ட்ரிம்மாகப் போனால் எப்படியிருக்கும்!

அதன் விலை எண்பது ரூபாயாம்! மனத்துக்குள் ஒரு மின்னல் அலை தெளிகிறது.

அந்த அழகான சட்டை அவன் கைகளுக்கு வந்தது.

மீதி பணத்திற்கு சாதாரண பாப்ளினில் நாலு மீட்டர் துணி எடுத்துக் கொண்டான். முழங்காலுக்குக் கீழே நீட்டி வைத்து, இந்தத் துணிகளில் இரண்டு மாக்சி தைத்துப் போட்டால் குழந்தை கீதாவுக்கு ஒரு வருடம் ஓடாதா? மலிவு விலையில் கிடைத்தத் துண்டுத் துணிகளில் சட்டைக்கும் அரைக் கால் சட்டைக்குமாக இரண்டு ஜதைத் துணிகள் எடுத்துக் கொண்டான். அது ராமுவுக்கு.

அவளுக்கு...?

அவள் ஆபீஸ் பார்ட்டிக்குப் போகாமலிருந்தால் போகிறது!

அவள் வீடு திரும்பும்போது மூர்த்தி வந்து விட்டிருந்தான்.

"என்ன இத்தனை சீக்கிரம்?"

அவன் மௌனமாகத் தந்த அட்டைப் பெட்டியிலிருந்து சிவப்பிலும், ஆரஞ்சிலும் மின்னும் பூக்கள் கொண்ட பாலியெஸ்டர் சேலை நழுவி விழுந்தது.

"புடவையா? எனக்கா?" அவள் பிரமிப்புடன் கேட்டாள்.

"ஆமாம்! அடுத்தவாரம் ஆபீஸ் பார்ட்டிக்கு வரணுமே நீ. உனக்கு வெளியில் கட்டிக் கொண்டுவர நல்ல புடவையே இல்லையே. எனக்கு 'அரியர்ஸ்' வந்தது. அப்படியே எடுத்துக் கொண்டுபோய், கையோடு இந்தப் புடவையை எடுத்துக் கொண்டு 'வந்துட்டேன். நமக்கு ஆயிரம் செலவுகள் இருக்கும். அதைப் பார்த்தால் முடியுமா?"

"உங்க ஆபீஸ்லே ஒரு பங்ஷன், பார்ட்டின்னு உங்களுக்கு மட்டும் நல்ல உடைகள் வேண்டாமா? அதனாலேதான் உங்களுக்கு இந்த 'டெரிகாட்' சட்டையை வாங்கிட்டு வந்தேன். பிடிச்சிருக்கா பாருங்க!"

"சட்டை அழகா இருக்கு... ஆனா உனக்கு ஏது பணம்?"

"அப்பா இருநூறு ரூபாய் தந்துட்டுப் போனார். குழந்தைகளுக்கும் துணிகள் வாங்கிட்டு வந்திருக்கேன்... தைக்கத் தரணும்..."

"என்ன ரமா! பாவம், அவருக்கு எவ்வளவோ தேவைகள் இருக்கும். மரியாதைக்குப் பத்து ரூபாயை எடுத்துக்கொண்டு மீதியைத் திருப்பித் தந்திருக்கக் கூடாதா!"

"அப்படி நான் திருப்பித் தந்தால் அப்பா வருத்தப்பட மாட்டாரா?"

"ஆனா நீ புடவை எடுத்துக்கிட்டிருக்கலாம் இல்லையா?"

"எனக்குத்தான் நீங்க எடுத்துத் தர்றீங்களே... உங்களுக்கு என்னைத் தவிர வேறு யார் எடுத்துத் தருவாங்க?"

"ரமா! இந்தப் பற்றுக் குறை மட்டும் நம் வாழ்வில் இல்லாவிட்டால், நாம் இன்னும் சந்தோஷமாக இருந்திருப்போம் இல்லையா?"

"இல்லீங்க! இந்தப் பற்றுக்குறைதான் நம்மை இரக்க உணர்ச்சியோடு பலமாக இறுக்கிப் பிணைக்க வைச்சிருக்கு. அது இல்லைன்னுகூட, நாம ஒருவேளை தூரதூரவே நின்னிருப்போமோ என்னவோ? இந்த மாதிரி ஒரு அன்னியோன்னியத்தை உருவாக்கறதிலே, பற்றுக்குறைக்கும் ஒரு பங்கிருக்கு போலிருக்குதுங்க. நம் அன்னியோன்னியத்தைச் கட்டிக்காட்டறதே இந்தப் பற்றுக் குறைதாங்க...!"

"உ ண் மை தா ன்... உண்மைதான் ரமா...!" நெஞ்சம் குழைய அவள் முகத்தை ஏந்திக் கொண்டான் மூர்த்தி.


The following particulars regarding the ownership of 'KALKI' the Tamil weekly newspaper, are published as called for by Rule 8 of the Registration of Newspapers (Central) Rules 1956.

FORM IV

1. Place of Publication: Madras
2. Periodicity of Publication: Weekly
3. Name of Printer: V. Murali
   Nationality: Indian
   Address: AA-117, Shanthi Colony, Anna Nagar, Madras-600 040.
4. Name of Publisher: V. Vaidyanathan
   Nationality: Indian
   Address: 6-A, Warren Road., Madras-600 004.
5. Name of Editor: K. Rajendran
   Nationality: Indian
   Address: 1, Purushothama Mudaliar Rd., Lake Area, Nungambakkam, Madras-600 034.

6. Names and addresses of individuals who own the newspaper and partners or share holders holding more than one per cent of the total capital: Bharathan Publications, Private Limited, 84/1-C, Race Course Road, Guindy, Madras-600 032.

I hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

V. Vaidyanathan,
Publisher.

1.3.1985.

# 1

ஏமத்தில் சாமத்தில் எதிர்வேல் காக்க
தாமதம் நீக்கிச் சதுர்வேல் காக்க
காக்க காக்க கனகவேல் காக்க
நோக்க நோக்க நொடியில் நோக்க...

சொல்லையே, தானும், தன்னையே உணர்வாய்க் குழைந்து மெய்யுருகச் சொல்லிக் கொண்டிருந்தாள் ராஜம்:

கூப்பிய கைகளும் மூடிய கண்களுமாய் ஒரு மோன நிலையிலிருந்தாள்.

''அம்மா நான் இன்னிக்கிச் சீக்கிரம் போகணும்...'' என்று சொல்லிக்கொண்டே சமையலறை நிலைப்படியில் இடித்துக் கொள்ளாமல் குனிந்து உள்ளே நுழைந்த சிவா, அம்மா சஷ்டி கவசம் சொல்வதைக்கண்டு, மௌனமாய்ச் சமையலைக் கவனித்துக் கொண்டிருந்த மாலாவிடம் போனான்.

''மாலா... எனக்குச் சீக்கிரம் காலேஜ் போகணும்... லாப்லே கொஞ்சம் வேலையிருக்கு...'' என்று தணிந்த குரலில் சொன்னவன் திரும்பி சுவாமி படத்தினருகே நின்றிருந்த அம்மாவைப் பார்த்தான்.

இன்னும் பதினைந்து நிமிடமாவது அம்மா இப்படி மெய்மறந்து நிற்பாள். சஷ்டி கவசத்தை, சொல் சொல்லாய் ரசித்துச் சொல்வாள். அது பிரார்த்தனையாக இல்லாமல், ஏதோ மிக நெருங்கியவரிடம் அந்தரங்கமாய் வேண்டுகோள் விடுக்கிற மாதிரி இருக்கும். சம்பாஷிக்கிற மாதிரி இருக்கும். அந்தப் பதினைந்து நிமிடங்களோடு சரி. அப்புறம் வேலை செய்ய ஆரம்பித்தாளானால், இரவு பத்தோ, பத்தரையோ, பல நாட்கள் அம்மா எப்போது படுத்துக் கொள்கிறாள் என்றே அவனுக்குத் தெரியாது. அவனுக்கு நினைவு தெரிந்த பதினைந்து வருஷங்களாய் இதுதான் வாழ்க்கை.

சட்டென்று பார்வையை மறைத்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டான்.

அவன் மன ஓட்டத்தைப் புரிந்து கொண்ட மாலா, ''சிவா... நீ போய்க் குளிச்சிட்டு வா... இன்னும் பத்து நிமிஷத்துலே சமையல் ரெடியாயிடும்... நான் குளிச்சாச்சு... எனக்குக் கூட இன்னிக்குச் சீக்கிரம் போகணு நல்லது. ஆடிட் நடக்கறது. அக்கவுண்டண்ட் சீக்கிரம் வந்துடும்மான்னார்... ரெண்டு பேரும் ஒண்ணா உட்கார்ந்தாத்தான் அம்மா சாதம் போடுவாள்... தனித்தனியாகச் சாப்பிட்டாக் குடும்பம் தனித்தனியாப் போயிடும்னு சொல்வாள்...'' என்று சொல்லிக் கொண்டே சமையலில் கவனம் செலுத்தினாள்.

'தனியா எப்படிம்மா போகும்? நீ சாதம் மட்டுமா போடுகிறாய்? அதோடு அன்பையும், பாசத்தையும், கனிவையும் சேர்த்தல்லவா போடுகிறாய்? உன் கைகள் வழியே தினசரி உன் இதயத்தையல்லவா நான் பார்க்கிறேன்...'

கொல்லைக் கிணற்றடியில் வாளி வாளியாய் இறைத்துத் தலையில் கவிழ்த்துக் கொண்டான். கிணற்று நீரின் ஜில்ஜில்லுப்பையும் மீறிக் கன்னத்தில் கண்ணீர் வெதுவெதுப்பாய் வழிந்தது.



கிணற்றையொட்டி வாய்க்கால் நீரில் நனைந்து கொண்டு சில வாழைக் கன்றுகள். அதைத் தாண்டிக் கப்பும் கிளையுமாய் வாதா மரம். அம்மா சொல்கிற மாதிரி 'சொளகு, சொளகாய் இலை'.

பார்த்தாலே சர்க்கால் தைத்துப்போட்டுக் கொண்டு அம்மா பிசைந்து போடும் தயிர் சாதத்தைச் சாப்பிட வேண்டும் போல் இருந்தது. பின்னால் தரையே தெரியாமல் அகல இலைகளால் கொடி உடலை மூடிக் கொண்டு, தரையெல்லாம் வியாபித்துக் கொண்டிருக்கும் பறங்கிக் கொடி. ஐந்து விரல்களை விரித்த மாதிரி மஞ்சள் பூக்கள். 'பூவுக்கு ஏழு காய் சொம்பறதா பார்' என்று அவனும் மாலாவும் பார்த்துப் பார்த்து எண்ணிக் கணக்கிட்ட இளமை நாட்கள் நினைவுக்கு வந்தன. அப்புறம் வேலிப்படல். சற்றுத் தொலைவில் அடுக்காய்க் கோயில் கோபுரம். கழிந்து போய்விட்ட காலத்தின் அடிச்சுவடுகள்...

''சிவா... வா வேண்டா, லேட்டாறது...''

அம்மாவின் குரல் கேட்டதும், ஏதோ விசைக்கு ஆட்பட்டவன் போல பரபரவென்று உடம்பைத் துடைத்துக் கொண்டான். பதினேழு வயது வாலிபத்தின் மிடுக்கும், விறைப்பும் நிமிர்ந்து அகன்ற மார்புகளில் பதிய, கருமை சட்டத் தொடங்கிய மீசையை நீவிவிட்டுக் கொண்டே உள்ளே போனான்.



## ஜெயராதன்

# புதிதாய்ப் பிறந்தாள்

மாலா சாப்பிடுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைக் கவனித்துக் கொண்டிருந்தாள்.

ஹால் பெஞ்சில் அவனது வேஷ்டியும் பனியனும் ஜட்டியும் அழகாய் மடித்து வைக்கப்பட்டிருந்தன.

அன்றாடம் முற்றத்துக் சயிற்றுக் கொடியில் அம்மாதான் அவன் துணிகளைத் துவைத்து உலர்த்துவாள். அளவாய்ப் பிழிந்து. துணிஉலர்த்துகிறதே நேர்த்தியாய் இருக்கும். காலை அவன் குளிக்கப் போனதும், காய்ந்தவற்றை எடுத்து. மடித்து ஹால் பெஞ்சின் மீது சுவர் ஓரமாக வைப்பாள. இதில் துளியும் மாற்றம் இருக்காது. இஸ்த்திரி போட்டது மாதிரி மடித்து. ஓரங்களை நீவி, தன் பிள்ளையையே தடவிக் கொடுக்கிற மாதிரி மிருதுவாய்த் தடவித் தடவிக் கொடுக்கிறதைப் பார்த்துக் கேட்பாள் மாலா.

''ஏம்மா... இதைக் கூட நீதான் செய்யணுமாம்மா... அவன் துணிவை அவன் துவைச்சுக்க மாட்டானா?... அவன் சின்னக் குழந்தையா...? அவனுக்கே மடிச்சு வைச்சுக்கத் தெரியாதா? எவ்வளவு வேலையைத்தான் நீயே செய்வே....''

சன்சுலை இடுக்கி, கழுத்தைச் சன்னமாய்ச் சாய்த்து மாலாவைப் பார்ப்பாள் ராஜம்.

மிருதுவான புன்னகை ஒருகணம் தோன்றி மறையும்.

''பெத்த குழந்தைக்குச் செய்யறது ஒரு சிரமமா...? அதுலே எவ்வளவு சந்தோஷம் இருக்குன்னு அனுபவிச்சாத்தான் தெரியும். காலம் வரபோது ஒனக்கே தெரியும்... அது மட்டுமில்லே. அவனுக்குப் படிப்பு ஒண்ணுதான் வேலையாக இருக்கணும்... வேற வேலையையே கொடுக்கக் கூடாது. நிறையப் படிச்சு, நல்ல மார்க் வாங்கி, பெரிய உத்தியோகத்துக்குப் போகணும்... அதோட இன்னொண்ணும் இருக்கு. புருஷக் குழந்தைகளை 'நீ எஜமான். நீ தலைவன்' அப்பமங்கற

மாதிரி சின்ன வயசிலிருந்தே உயர்த்தி உயர்த்தியே வளர்க்கணும். அவன் மனசுலே அப்பத்தான் கம்பீரம் வேர் விட்டுண்டு செழும்பும். வயசு வந்ததும், இந்தக் குடும்பத்துக்குத் தலைவன் இல்லியா அவன்? சின்ன வயசிலிருந்தே தலைமைக் குணத்தை வளர்க்கணும். ஆண் குழந்தைகளுக்கு அது முக்கியம்.''

'ஒவ்வொரு ஆணின் வெற்றிக்குப் பின்னாலும் ஒரு பெண் இருக்கிறாள்' என்பதற்கு இதுதான் அர்த்தமா? நிஜமான ஒரு ஆணை, பெண்ணின் தாய்மைக் கனிவுதான் உருவாக்குமோ? ஆணின் கம்பீரத்தைப் பெண்ணின் நளினம்தான் காக்கிறதோ? ஆண்மையின் முரட்டுத்தனத்தைப் பெண்மையின் மென்மைதான் போஷிக்கிறதோ?

மாலா மௌனமாகிப் போவாள்.

இப்படி ஒவ்வொரு விஷயத்திலும்தான் அம்மாவுக்கு எவ்வளவு அக்கறை? சின்னச் சின்ன விஷயங்களில்தான் எவ்வளவு நுணுக்கம்?

காலை சூர்ய உதயத்திற்கு முன்னால் எழுந்துவிட வேண்டும். சிறிது தாமதமானாலும் பொறுக்க மாட்டாள்.

''சூர்யனோட கை, நம்ம சுறுசுறுப்பைப் பார்த்து 'சபாஷ்'னு முதுகிலே தட்டிக் குடுக்கணும். அந்தக் கையை நம்ம படுக்கையைச் சுருட்டி வைக்க உபயோகிக்கக் கூடாது...''

''உடம்பு முடியல்லேன்னு, என்ன பண்றது?''

''சீக்கிரம் எழுந்திருந்து பாரு, அப்புறம் உடம்புக்கே வராது...''

''அம்மா, நீ மட்டும் படிச்சிருந்தே, பெரிய ஆளா ஆயிருப்பே.. வக்கீல் மாதிரிப் பேசறியே...?''

''இங்கிலீஷ் படிச்சாத்தான் படிப்பா?... வெள்ளைக்காரர்கள் வரதுக்கு முன்னாலே, நம்ம நாட்டிலே படிச்சவர்களே இல்லேன்னு அர்த்தம், மாலா?''

''சபாஷ்மா'' என்று அம்மாவின் கையைப் பிடித்துக் குலுக்குவாள் லீலா. ''மாலா... ஸாரி பேபி!... அம்மாகிட்ட ஆர்க்யூ பண்ணி ஜெயிக்க முடியுமா...?''

''...அம்மா சொல்றது கரெக்ட் மாலா... இப்பல்லாம் படிப்புன்னு உடனே இங்கிலீஷ்லே தான் இருக்கணும்னு சொல்றமாதிரி ஒரு பிரமை இருக்கு... விஷயமில்லாம ஜஸ்ட் இங்கிலீஷ்லே பேசிட்டாலே, மரியாதை கொடுக்கற அளவுக்கு நாமெல்லாம் ஒரு பாஷையைக் கும்பிட ஆரம்பிச்சுட்டோம்... அதுனாலே நம்மோட நாகரீகத்தையே மாத்தற அளவுக்கு பாஷை மயக்கம் ஏற்பட்டுப் போச்சு... எவ்வளவு பெரிய மேதைகளெல்லாம் இந்த நாட்டிலே இருந்திருக்கிறார்கள்...? ஆங்கில அறிவுதான் அளவுகோல்னா, திருவள்ளுவரும், வால்மீகியும், பதஞ்சலியும் படிக்காதவர்கள்தாம்...''

விதவிதமாய்ச் சம்பாஷணைகள் வளரும். மாலாவும் சிவாவும் விடாமல் வாதம் செய்வார்கள்.

மௌனமாய்ப் பார்த்து, ரசித்துக் கொண்டிருப்பாள் ராஜம்.

அதுமாதிரித்தான், மாலை விளக்கேற்றுகிற நேரத்திற்கு, எங்கே போயிருந்தாலும் வீட்டுக்கு வந்துவிட வேண்டும். தாமதமாகுமென்றால் சொல்லிவிட வேண்டும். கண்டிப்பு என்றால் அப்படி ஒரு கண்டிப்பு.

அம்மா... அம்மா... வாயில், கொல்லை, அறை, வெளி என்று எல்லா இடமும் பரந்து, விரிந்து வியாபித்துக் கிடக்கிற அம்மா. கணி முனையாய்ச் சுருங்கி, மனத்தின் இண்டு இடுக்குக்குள் எல்லாம் நுழைந்து தூண்டித் துருவிப் பார்க்கிற அம்மா... எண்ணத்தைத் தொடர்ந்து நெஞ்சுக்குள் புகுந்து இயங்கிக் கொண்டிருக்கும் அம்மா... இந்த வீட்டின் ஜீவசக்தி அம்மா...

''சிவா... என்னடா இது... இத்தனை நாழி பண்றே... மாலா உனக்காகக் காத்துக் கொண்டிருக்கா... ஹூம்... சீக்கிரம்...''

அம்மாவின் அதட்டல், வேகவேகமாய்ச் சிவாவை இயக்கிற்று.

சாப்பிட உட்கார்ந்தான்.

பரிமாறத் தொடங்கினாள் ராஜம்.

சுவையும், மணமும் கமிக்க வைக்கப் பரிமாறினாள்.

சமைப்பதைவிட, பரிமாறுவதில் ஒரு நயம் இருக்கிறது. சமையலின் சுவைக்குப் பரிமாறுவதின் நயம் ஒரு கிரீடம். அம்மா அந்த ஜோடனையில் டிகிரி வாங்கியவள்.

''மாலா... உங்கம்மாவைத் தேடி யாரோ வந்திருக்கா...''

வாயிலில் பக்கத்து வீட்டு ரேணுவின் குரல் தேய்ந்து மறைந்தது.

''சாப்டுங்கோ... யார்னு பார்த்துட்டு வரேன்...''

புடவைத் தலைப்பில் முன் கையைத் துடைத்துக் கொண்டு வாசலுக்குப் போனாள் ராஜம்.

கையில் ஒரு அழுக்குப் பையுடன், சணல் பழுப்பில் தாடியும், மீசையுமாய், 'கன்னங் குறைந்து கண்கள் உள்ளே பதுங்கி, கூன் விழுந்து, தட்டுத் தடுமாறிக் கொண்டு...

யார்... யாரது?

''ராஜம்... என்னைத் தெரியல்லியா...? நான்தான் பலராமன் வந்திருக்கேன்...''

அதேகுரல். சற்று முதுமையில் தோய்ந்து நடுங்கிக் கேட்கும் அதே குரல். 'ஏய்' என்று பெயரைச் சொல்லாமலே அதட்டிய குரல். அவளை அதிர வைத்த குரல்.

அவரில்லையோ?... ஆம். அவர்தான்.

அடிவயிற்றுக்குள் சுருள் கத்தி நெளிந்தது. நெஞ்சுக்குள் பனிச்சாரல் வீசிற்று. கால்கள் தள்ளாடின. கண்கள் இருண்டன. ஆதாரமாய்ச் சுவரைப் பிடித்துக்கொண்டாள்.

சுவாதீனமாய் உள்ளே நுழைந்தான் பலராமன்.

''வாங்கோ...''

குரல் கிணற்றுக்குள்ளிருந்து ஒலிக்க, தள்ளாடிக் கொண்டு உள்ளே போனாள்.

வீடே சுழன்றது.

''என்னம்மா... யாரு?...ஏன் எப்படியோ இருக்கே...?'' என்று கையை உதறிக் கொண்டு எழுந்து ஓடிவந்தான் சிவா.

அம்மாவைத் தொடர்ந்து தட்டுத்தடுமாறி உள்ளே நுழைந்த பலராமனைப் பார்த்தான்.

''யாருய்யா இது...? நீபாட்டுக்கு உள்ளே வரே... போ வெளியே...''

மிரட்டும் குரலுடன் துரத்தப் போன




இப்போது ரூபாயின் மதிப்பு 17 பைசாதான் என்று சொல்கிறார்கள். ஆனால்... 122 வருடங்களுக்கு முன்பு ஒரு நாலணா (இப்போதைய 25 பைசா) நாணயத்தின் மதிப்பு மிக அதிகம்! எனவே, அப்போது டில்லியில் ஒருவர் ஒரு நாலணாவைத் தொலைத்துவிட்டு உடனே போலீசில் புகார் செய்தார். 20.5.1862 அன்று டில்லி கொத்வாலி போலீஸ் ஸ்டேஷனில் அவர் கொடுத்த புகார் இன்றைக்கும் அந்தக் காவல் நிலையத்தில் இருக்கிறது!

('மிர்ரர்' இதழிலிருந்து)
—அனிதா ராமச்சந்திரன்

சிவாவைப் பார்வையால் அடக்கினாள் ராஜம்.

''அது உங்க அப்பாடா...''

குரல் சிதறச் சொன்னாள்.

அப்பாவா? யார் அது? பதினெட்டு வருஷங்களுக்கு முன்னால் அவன் ராஜத்தின் வயிற்றில் இரண்டு மாதக் கருவாய் இருக்கும்போது, அவர்களை வீட்டை விட்டுத் துரத்தினானே, அந்த மனிதனா வந்திருக்கிறான்?

ஆக்ரோஷத்துடன் பலராமனையே பார்த்தான் சிவா.

(தொடரும்)

ஹார்லிக்ஸ் எங்களுடைய குடும்ப நண்பன். ஆபீஸிலிருந்து களைப்புடன் திரும்பிவரும் என் கணவருக்கு, காலேஜ் மற்றும் டான்ஸ் கிளாஸை முடித்துக் கொண்டு வரும் என் பெண்ணிற்கு, ஸ்கூல் முடிந்து திரும்பும் புட்பால் வீரனான என் பையனிற்கு—ஏன், தினமும் கடைகண்ணி போய் திரும்பும் எனக்கும்தான்—ஹார்லிக்ஸின் துணை ரொம்ப முக்கியம். எங்கள் குடும்பத்தின் நலனிற்காக நான் ஹார்லிக்ஸையே நம்பறேன்.

மால்ட்டட் பார்லி, முழு ஆடைப்-பால் மற்றும் பொன்னிற கோதுமைகொண்ட ஹார்லிக்ஸ் ஒரு சுவையான, சத்தான பானம். ஊட்டச்சத்திற்கு மூலாதாரமான ஒரு லட்சிய பானமென்ற நம்பிக்கையைப்பெற்றது. எனவே, கடந்த நூறு வருடங்களாக கோடிக்கணக்கான குடும்பங்கள் உலகமெங்கும் ஹார்லிக்ஸின்மேல் நம்பிக்கை வைத்து வருகிறார்கள் என்பதில் ஆச்சரியமில்லை.




**சிறந்த ஊட்டச்சத்துமிக்க பானம்**

## 20

### வியாபாரி வந்தார்

அந்த நேரத்திலும் அந்த இடத்திலும் சிந்துவைக் கண்டதும் ஆச்சரியப்பட்டான் வர்மன்.

சந்தாசாகிப் படை வீட்டுக்கு அவனை அழைத்துச் செல்ல முடியும் என்று அவள் கூறுவதைக் கேட்டு மேலும் ஆச்சரியம் அடைந்தான்.

'இவளுக்கு எல்லா இடத்திலும் வியாபகம் இருக்கிறதே' என்று நினைத்தான்.

''சரி! அழைத்துப் போங்கள். உங்கள் நிபந்தனைக்கு உட்படுகிறேன்!'' என்றான்.

இருவரும் புறப்பட்டார்கள். போகிறவழியில் வர்மன் செஞ்சுகா பற்றிய விவரங்களைக் கூறிய வண்ணம் சென்றான்.

கோரைப் புற்கள் இருபுறமும் வளர்ந்த தடத்தின் வழியே சென்றார்கள்.

இடையில் ''அம்மா! உங்களுக்குச் செஞ்சுகா மீது எவ்வளவு கரிசனம் இருக்கிறது!'' என்றான் அவன்.

சிறிது தூரத்தில் பாதை பள்ளத்தில் இறங்கியது.

அங்கே விரிவான புல் பரப்பில் ஒரு கூடாரம், குதிரை, பொதி மாடுகள், ஊழியர்கள், காவலர்கள் சகிதம் வேன்ஸான் ராஜ் என்ற வர்த்தகர் ஒரு முக்காலியில் அமர்ந்திருந்தார்.

அவரிடம் கொண்டு போய் வர்மனை நிறுத்தினாள்.

வேன்ஸான் ராஜ் நல்ல ஆகிருதியுடன் அழகாக இருந்தார். தீர்க்கமான நாசி எடுப்பான உதடு. பரந்த மார்புகள்! நீண்ட கைகள்!

முகம் முழுச் செவப்பு இல்லாவிடினும் ஒரு வெள்ளை மினுக்குக் காட்டியது.

கண்ணில் இந்தியத்தனம் நிறைய இருந்தது. நிறைய தாடி வளர்ந்து தாடைகளை மூடி இருந்தது.

ஐரோப்பிய உடை தரித்துக் கையை இடுப்பில் வைத்திருந்தார்.

பரங்கியரில் வெள்ளை நிறம் மட்டுமல்ல! பல்வேறு நிறங்களைப் பார்த்திருக்கிறான்.

இவன் வெள்ளைத் தேசத்தைச் சேர்ந்தவனாக இருக்காது. வேறு ஏதாவது தேசம் இருக்கும்!

வேன்ஸான் சிந்துவைப் பார்த்தவுடன் ''போன் ஷூர்'' என்று முகமன் கூறினான். ''உட்காருங்க! உட்காருங்க'' என்றான்.

சிந்து புல் தரையில் அமர்ந்தாள்.

வர்மனும் அமர்ந்தான்.

''இன்னு சௌக்யமா? நாயக்கராஜா சௌக்யமா? போளேகார் (பாளையக்காரர்) எல்லாம் சௌக்யமா? கார்வேட் ராஜா சௌக்யமா?'' என்று ஒவ்வொருத்தராகக் குசலம் விசாரித்தவாறு போனான் அவன்.

''இங்கே ஒரு காரியமாக வந்தோம்.'' என்றாள் சிந்து.

''என்ன வேணும். திமான்தே (கேளுங்கள்)'' என்றான் வேன்ஸான்.

''படை வீட்டுக்கு இவர் போக வேண்டும்!'' என்றாள் சிந்து.

''ஓ! வியாபாரியா?''

''இல்லே.''

''ஒற்றனா?''

''நிச்சயம் இல்லே. நம்ப கார்வேட் ராஜா மகள் செஞ்சுகா இந்தப் படை வீட்டிலே இருக்காங்க!''

''ஆங்!'' என்று திகிலோடு விழித்தான் வேன்ஸான். ''ஏன் போனாங்க! என்ன விஷயம்?''

''பணயம் எழுதிட்டிருக்காங்க!'' என்றாள் சிந்து.

விவரங்களைச் சுருக்கமாய்க் கூறினாள். வேன்ஸான் கண்களை மூடித் தாடியை வருடிவிட்டான்.

''மான் தியே! (என் கடவுளே)'' என்றான் அவன். ''எல்னெல்லாம் நடக்குது! உங்க நாடு பாழாப் போகுது!''

சிந்து பதில் சொல்லவில்லை.

''அம்மா, நான் சொல்றேன் கேளுங்க! இப்போ சந்தாசாகிப் கை கொஞ்சம் மேலே இறங்குது. நேரம் சரியில்லே.''

''ஏன்?'' என்றாள் சிந்து.



''இங்கிலீஷ்காரன் ஆர்க்காட்டுக்குள்ளே புகுந்துக்கிட்டானில்லே?''

''ஆமாம்!''

''சந்தாசாகிப்பின் கபிதல் (தலைநகரம்) ஆச்சே அது! போயிட்டா அவமானமாச்சே!''

''இப்போ என்ன செய்யப் போறார்?''

''மகன் ராஜா சாகிப்பை அங்கே அனுப்பியிருக்கார்!''

''எப்போ?''

''போய் ரெண்டு நாளாச்சு!''

''படை எத்தனை போகுது?''

''இரண்டாயிரம் சிப்பாய்.''

''அப்போ ஆர்க்காட்டைத் திருப்பிப் பிடிச்சுடுவாங்க!''

''ஆமாம்! இங்கிலீஷ் படை 500 பேர் தானே! உளவு வந்திருக்கு! இவங்க போய் அத்தனை பேரையும் நசுக்கிடப் போறாங்க! ஆனா, இங்கே தான் நிலைமை பலவீனமாகும்.''

''ஏன்?''

''ரெண்டாயிரம் போச்சதுன்னா, இன்னும் ரெண்டாயிரம் தான் மிச்சமிருக்கும். திருச்சிராப்பள்ளிக் கோட்டை இன்னும் பிடிபடவில்லே! முகம்மதலி பலமாகத்தான் இருக்கார். இங்கிலீஷ்காரங் ராஜ தந்திரம் பண்ணறான். ஆர்க்காட்டைப் பிடிக்கப்போனதே, சந்தாசாகிப்பை அங்கே இழுக்கத்தான்! இங்கிலீஷ்காரன் நினைச்சது சரியாப் போச்சு. நம்ம பாதிப் படை அங்கே போயாச்சு! மீதி பாதி இங்கே காணுது! அஞ்சு மாசமா சாகிப் (சந்தாசாகிப்) முற்றுகை போடறாரு. இந்தா பிடிச்சாச்சு, அந்தாப் பிடிச்சாச்சுன்னு சொன்னாங்க. முகம்மதலி சரணடைவான்னு சொன்னாங்க! ஆனா, காலம் பாருங்க, இங்கிலீஷ்காரன் அவருக்கு உடந்தையாக வந்திலே எல்லாம் மாறிப் போச்சு! கோட்டைக்குள்ளே போக முடியல்லே! கோட்டையைத் தாக்கின சாகிப் (சந்தாசாகிப்) முதுகைத் தாக்கவே இங்கிலீஷ் படை கோட்டைக்கு வெளியே சித்தமாயிருக்கு. அப்படியே இழுபறியா இருக்கு விஷயம்! நான் கூட பேசாமல் புதுச்சேரி போயிரலாமான்னு பார்க்கிறேன்.''

''ஏங்க? வியாபாரம் என்னுகறது?''

''ஹும்! இது ஒரு வியாபாரமா? தூப்ளே சொன்னாருன்னு வந்தேன். சாகிப் கையிலே பணமில்லே. சிப்பாய்களுக்குச் சம்பளம் கொடுக்கலே. சாகிப் என்னைக் கூப்பிட்டு உத்திரவாதம் எழுதிக் கொடுத்துச் சிப்பாய்களுக்கு அரிசி போடச் சொன்னாரு. போட்டேன். திரும்பத் திரும்பப் போடச் சொல்றாரு! பார்த்தேன். சரக்கு எடுத்துக்கிட்டு வரேன்னு வந்துட்டேன். இப்போ இங்கிலீஷ்காரங் சாமான் வாங்கிக்கிட்டுப் போறான். அதான் இப்படி ஒதுக்கமாகவே

**ஸ்ரீவேணுகோபாலன்**



வந்துட்டேன். டேய் முருகா. பூத்தேய் (பாட்டில்) கொண்டா!''

சோ வந்தது.

அதிலிருந்து செக்கச் சிவந்த திரவத்தைக் கோப்பையில் ஊற்றினன்.

அவர்களிடம் நீட்ட, அவர்கள் மறுத்ததும் ''அ வோத்ர ஸாந்தே!'' (உங்கள் ஆரோக்கியத்திற்காக) என்று சொல்லி ஒரு மடக்கு விழுங்கினன்.

(அந்த நாட்களில் படைகளுக்கு ராணுவமே சாப்பாடு போடாது. சம்பளம் வழங்குவதோடு சரி. அவரவர் உணவை அவரவர் தயாரித்துக் கொள்வார்கள். அவர்களுக்குப் பொருள்களை வழங்குவதற்காக வியாபாரிகளும், படைகளோடேயே செல்வார்கள். யுத்த களத்திற்கு அப்பால் தண்டு இறங்கி வியாபாரம் நடத்துவார்கள். சிப்பாய்கள் தாங்களே தங்கள் சமையலைக் கவனிப்பார்கள். அல்லது சமையல் ஊழியர்களை நியமித்துக் கொள்வார்கள். சமயங்களில் படையைவிட அதன் ஊழியர்களே எண்ணிக்கையில் அதிகமாக இருப்பார்கள். மேனாட்டவர் வந்த பிறகுதான் இந்தப் பழக்கம் சிறிது சிறிதாக மாற ஆரம்பித்தது)

''அப்படியானல் சந்தாசாகிப் தோற்றுப் போவாரா?'' என்று ஆச்சர்யமுடன் கேட்டான் சிந்து.

''தோல்வி என்பது இல்லை. முற்றுகையை விட்டோட வேண்டியிருக்கும். இல்லாவிடில் மற்றொரு ஆபத்து இருக்கிறது...''

''என்ன ஆபத்து...?''

''திருச்சிராப்பள்ளிக் கோட்டைக்கு வெளியே இங்கிலீஷ் படைகள் நிற்கின்றன. ஆற்றுக்கு அப்பால் ஸ்ரீரங்கத்தில் படை நிற்கிறது. இங்கிலீஷ்காரன் தந்திரசாலி! போகிற போக்கில் சாகிப் படையைச் சுற்றி வரத் தன் படையினைக் கொண்டு வைத்து, சாகிப் தப்பி ஓட வழியில்லாமல் பண்ணி விடுவான். சாகிப் என்னை அவசரமாக அழைத்துவர இரண்டு மூன்று முறை ஸோல்தாதுகளை (சிப்பாய்கள்) அனுப்பி வைத்தார். ஒரு கபிதான் (கேப்டன்) கூட வந்து போனுர். 'வருகிறேன்' என்று சொல்லி அனுப்பியிருக்கிறேன். இப்போது இருக்கும் நிலையில் பொலிதிக் (அரசியல்) பக்கம் தலை வைக்காமல் இருப்பது நல்லது.''

சிந்து சலனத்தோடு கேட்டான்.

''ஏன்.. பிரெஞ்சுக்காரர்கள் சாகிப்பிற்கு உதவவில்லையா?''

''அவர்களே புதுச்சேரியில் போதிய பலம் இல்லாது இருக்கிருர்கள்! ஒரு படை அனுப்பியிருக்கிருர்கள். ஆனல் அவர்கள் தளபதி ஜாக்கே லா ஒரு தைரியசாலி அல்ல. ஒதுக்கலாக ஆற்று ஓரம் தண்டு இறங்கிச் சும்மா இருந்து வருகிருன்.''

''அவன் படை எவ்வளவு?''

''ஐநூறு பேர்தான் இருப்பார்கள். சொற்பம்தான். இருந்தாலும், இங்கிலீஷ்காரன் போலத் தைரியம் காட்ட வேண்டாம்?''

''அப்போ நிச்சயம் இனி சாகிப் திருச்சிராப்பள்ளியைப் பிடிக்க முடியாது! இல்லையா துரை?''

இன்னொரு மடக்கை விழுங்கினான் வேள்ளான்.

''இப்போது இருக்கும் சூழ்நிலையில் முடியாது. அது மட்டுமல்ல. சாகிப்பிற்கே இங்கே இருந்தால் ஆபத்து...''

சிந்து மௌனமானாள்.

மாலை வெயில் சாய்வாக விழத் தொடங்கியது. ஆறும் தோப்புகளும் மென்மையான மஞ்சள் ஒளியில் நனைய ஆரம்பித்தன.

வேள்ளான் சீசாவைக் கீழே வைத்தான்.

''துரை!'' என்றாள் சிந்து. ''இந்த நிலையில் செஞ்சுகா இங்கே இருப்பது தவறு இல்லையா?''

''நிச்சயம் தவறு. வெற்றி எந்தப் பக்கம் திரும்புமோ தெரியாது!''

''செஞ்சுகாவை இவர் பார்க்க வேண்டும்!''

''முயற்சிசெய்கிறேன் அம்மா! சிக்கலான விஷயம்.''

''நீங்கள் மனம் வைத்தால் நிச்சயம் நடக்கும்.''

''மனம் நிச்சயம் வைக்கிறேன். ஆனால் சூழ்நிலை சரியில்லை.''

''முடிந்தால் செஞ்சுகாவை நீங்கள் விடுவிக்கவும் வழி செய்யலாம்!''

வர்மன் இதைக் கூற, வேள்ளான் நிமிர்ந்து அவனைப் பார்த்தான்.

''விடுதலையா...?'' ஒரு சிரிப்புச் சிரித்தான். ''சாகிப்பிற்கு வேண்டியது இப்போது பணம். அதற்காக என்ன வேண்டுமானாலும் செய்வார். பணயமாகச் செஞ்சுகா அகப்பட்ட பிறகு நிச்சயம் அவளை விடுதலை செய்ய மாட்டார்.''

''அப்படியானால் அவளைப் பார்க்கவாவது செய்கிறோம்!'' என்றான் வர்மன்.

வேள்ளான் துரை சிறிது நேரம் யோசனையில் இருந்தான். பிறகு ம்ம்ம்... என்று சொல்லித் தனது பெரிய உடலை மேலே தூக்கினான்.

''வா தம்பி! இந்த அந்தி நேரம்தான் சிறந்தது. உள்ளே போய்ப் பார்க்கலாம். உன் உடையைக் கழற்று. எங்கள் வியாபாரி உடையைப் போட்டுக் கொள். முருகா! இவருக்கு நம்ப உடை கொண்டு கொடு. சீக்கிரம்.''

உடை வந்தது. அந்த மேனாட்டு பாண்ட், சட்டைகள் அணிந்ததும் வர்மனுக்குப் புதுக் களை வந்திருந்தது.

சிந்து அவனை ஆர்வத்தோடு பார்த்தாள்.

''ம்! குதிரை ஏறு!'' என்றார் வேள்ளான்.

''நீங்க இங்கேயே இருங்க!'' என்றான் சிந்துவை நோக்கி.

இருவரும் புறப்பட்டார்கள்.

புல்தரிசை வழியே குதிரைகளைச் செலுத்தினார்கள்.

மெள்ள எங்கும் இருள் விழுந்து கொண்டிருந்தது. தூரத்தில் கோட்டை சிறியதாகத் தெரிந்தது.

கோட்டைக்கு வெளியே ஆற்றங்கரையை ஒட்டி இரண்டு வெளிச்சத் திடல்கள் தெரிந்தன.



''நூறுபேர்கள் சேர்ந்து ஒரு முகாம் அமைக்கலாம். ஆனால் ஓர் இல்லத்தை இல்லமாக்க ஒரு பெண் வேண்டும்.''

—சீனப்பழமொழி.

''நம்முடைய குற்றவாளிகளில் நூற்றுக்கு எண்பது பேர் அனுதாபமில்லாத வீடுகளிலிருந்து வந்தவர்கள்.''

—ஆண்டர்சன்.

''கட்சிக் கொடிகளின் நிழலில்தான் தேசபக்தி புதைக்கப்படுகிறது.''

—செயின்ட் பியேர்.

''வெளியே காட்டிய கோபம் மன்னிப்புக்கு வழிதேடும். உள்ளேயடக்கிய கோபம் பழிக்கு வழி தேடும்.''

—புல்வெர்.

தொகுப்பு: நாமக்கல் ரமேஷ்குமார்.

''வலதுபுற வெளிச்சத்திற்குத் தான் போகிறோம்'' என்றான் வேள்ளான்.

''இடதுபுற வெளிச்சம் என்ன!'' என்றான், வர்மன்.

''அது இங்கிலீஷ் படை!'' என்றான் வேள்ளான்.

மெல்லிய ஆற்றங்கரைக் காற்றில் சிலுசிலுத்துப் போய் இருவரும் இலகுவான மனத்துடன் பிரயாணம் செய்தார்கள்.

சந்தாசாகிப்பின் படை வீட்டை நெருங்க, நெருங்க, அங்கே ஏதோ ஆரவாரம் கேட்பது தெரிந்தது.

கூச்சலும் கூப்பாடும் கேட்பதுபோல் இருந்தது.

தீவர்த்திகள் அங்குமிங்கும் வேகமாக நகர்ந்து கொண்டிருந்தன.

''தம்பி! என்னவோ குழப்பம் நடக்கிறது அங்கே!'' என்றான் வேள்ளான்.

''அப்படியானால் செஞ்சுகாவை மீட்கலாமா?'' என்றான் வர்மன்.

வேள்ளான் அவனை ஏற இறங்கப் பார்த்தான்.

''தம்பி! அவசரப்பட்டு எதையும் செய்யாதே! நீ எனக்கு வியாபார உதவியாக வருகிறாய்! அவ்வளவுதான். அதனால்தான் உன்னைத் தண்டுக்குள் விடுவார்கள். அங்கே போய் உன் சூரத்தனம் வீரத்தனம் எதுவும் காண்பிக்காதே! ஒரு சேனி உன்னைக் கேட்க வேண்டும். செஞ்சுகாவைக் காப்பாற்ற நீ மட்டுமா வந்தாய்?''

''ஆமாம்!''

''உனக்கு என்ன சொந்த அக்கறை?''

வர்மன் உடனே பதில் சொல்லவில்லை.

(தொடரும்)

# வாசகர் பங்கு

### கணவருக்கு நன்றி

திருமணமான புதிது. என் கணவர் அசைவம். நான் சைவம். நண்பர் வீட்டில் அசைவ விருந்து படைத்ததோடு கணவர் சாப்பிட்ட இலையிலேயே நான் சாப்பிட வேண்டும் என்று பிடிவாதமாக அடம் பிடித்தனர். என் கணவர் என் தர்மசங்கடநிலை உணர்ந்து சாப்பிட்டு முடித்ததும் தம் இலையை யதேச்சையாகக் கிழிப்பது போல் இரண்டு மூன்று இடங்களில் கிழித்து விட்டார். வேறு இலை போட்டுச் சைவ உணவு மட்டிலும் பரிமாற, கணவரை நன்றியுடன்





பார்த்தபடியே ஆனந்தமாய்ச் சாப்பிட்டேன்.

சென்னை-39 — திருமதி இளமுருகன்

### நல்லவர் மத்தியில் விழுந்தேன்!

இண்டர்வியூ ஹாலுக்குள் நுழையும் போது மிதியடி தடுக்கி சாஷ்டாங்கமாய் விழுந்தேன். தட்டிக் கொட்டிக் கொண்டு எழுந்து புன்னகையுடன், "ஐ ஆம் ஹாப்பி தட் ஐ ஹாவ் ஃபாலன் இண்டு தி கம்பெனி ஆஃப் வெரி குட் பீப்பிள்" என்று ஆங்கில வழக்கு மொழியைச் சிலேடையாகப் பிரயோகிக்கவும் அவர்கள் சிரித்ததோடு உடனே வேலையும் கொடுத்து விட்டார்கள்!

செகந்திராபாத். — கே. ஜம்புநாதன்

### தாட்சண்யம் தர்மசங்கடம்

சென்ற அக்டோபர் இறுதியில் டில்லியிலிருந்து ரயில் கிளம்பும் சமயம் ஒரு நண்பர்



மூட்டைக் கட்டுடன், நாத்பாலி போன்றவற்றை என்னிடம் ஒப்படைத்து அவற்றை செண்ட்ரல் ஸ்டேஷனில் தம் உறவினர் வந்து வாங்கிப் போவார் என்றார். ஏற்பட்ட லக்கேஜ் கட்டணம் அழுது பத்திரமாகக் கொண்டு வந்து சேர்த்தேன். ஆனால் அவற்றை வாங்கிப் போக யாரும் வரவில்லை. இரவு முழுவதும் காத்திருந்து பாதுகாத்து, மறுநாள் குதிரை வண்டிக்கு அறுபது ரூபாய் அழுது வீடுபோய்ச் சேர்வதற்குள் "தாட்சண்யம் தர்மசங்கடம்" என்ற முதுமொழியை வாய் பல முறை முணுமுணுத்தது.

குளித்தலை — ஆனந்த்

### ஹிந்தி வாழ்க!

சென்னை, சாந்தி தியேட்டர் அருகில் சாலையைக் கடந்து போலீஸாரிடம் மாட்டிக் கொண்டேன். வடநாட்டில் சில காலம் வேலை பார்த்ததால் தெரிந்த அரைகுறை ஹிந்தியில் பேசித் தமிழன் அல்லாதது போல் நடித்தேன். போலீஸ்காரரும் மொழி புரிபடாததாய்க் கூறிக் கொண்டு வந்த டாக்ஸி டிரைவரும் கடைசியில் எரிச்சலடைய, "சாவு கிராக்கி" என்ற பட்டத்துடன் அனுப்பி வைத்தனர்!

தூத்துக்குடி. — ஜே. சுதாகர்

### மனமிரங்கி...

திருப்பதி சென்று திரும்பும் போது அப்பாவின் பர்ஸ் களவு போய் விட்டது... அம்மா வைத்திருந்த சொற்பப் பணத்தில் எப்படியோ நாகைப்பட்டினம் வரை வந்து விட்டோம். அங்கிருந்து திருத்துறைப்பூண்டி போக வேண்டும். கையில் சல்லிக் காசு கிடையாது. பஸ் கண்டக்டரிடம் நிலைமையை எடுத்துரைத்து ஊர் போய்ச் சேர்ந்ததும் பஸ் ஸ்டாண்டு அருகிலேயே தெரிந்த கடைக்காரரிடம் பணம் வாங்கித் தருவதாகக் கூற, அவரும் மனமிரங்கி என்னை ஏற்றிக் கொண்டார்.

மேட்டூர் அணை — எஸ். குமுதா

### குழந்தை மனம்

அடுத்த வீட்டு மாமி சர்க்கரை கடன் கேட்க, கடன் தருவது பிடிக்காததால்



தீர்ந்து விட்டதே எனவும் எனது மூன்று வயதுப் பெண், 'அம்மா சர்க்கரை பாட்டிலில் நிறைய இருக்கே,' என்றாள். உடனே, அப்படியா? பாட்டி வாங்கி வந்து விட்டாளா? எனக்குத் தெரியாது என்று சமாளித்து வேறு வழியின்றிச் சர்க்கரை கடன் கொடுத்து அனுப்பினேன்.

பம்பாய் — தீபா ரவி

**அறுவை மில்!**

பக்கத்து வீட்டுக்காரரைக் குறித்து அறுவை மன்னர் என்று வர்ணித்துக்கொண்டிருந்தேன். அன்று மாலை அவர் என் வீட்டுக்கு வந்த போது என் அண்ணன் மகள் படுசுட்டி யோகா, 'சித்தப்பா இவர் தானே அந்த அறுவைக்காரர்?' என்றாள். நான் 'ஹி... ஹி... நீங்கள் அரவை மில் வைத்திருப்பதைத்தான் குழந்தை மழலையாக அப்படிச் சொல்கிறாள்' என்று கூறிச் சமாளித்தேன்.

**போடிநாயக்கனூர்,** — **எம். ரமேஷ்குமார்.**

**தோளில் பூச்சி!**

விருந்தாளி சற்றுக் குள்ளமானவர். என் பதினொரு வயதுப் பையன் சற்றும் இங்கிதம் தெரியாமல் அவர் பக்கலில் நின்று தோள் அளவுகளை ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டிருந்தான். சங்கடத்துடன் நெளிந்த நான், 'உங்கள் தோளில் ஏதோ பூச்சி, அதான் பையன் பார்க்கிறான்' என்று அவர் தோளை இலேசாகத் தட்டிவிட்டு, பையனைக் கடைக்கு ஏதோ வாங்கிவர அனுப்பி வைத்தேன்.

**மதுரை,** — **எல். டி. ராமானுஜம்**

**ஆரஞ்சுப் பாடம்**

முதல் வகுப்பில் பாடம் நடத்திக்கொண்டிருந்தேன். அதேசமயம் கையில் ஒரு ஆரஞ்சு வைத்துக் கொண்டு சாப்பிட அதை உரிக்க ஆரம்பித்தேன். அந்தச் சமயம் பார்த்துத்தானா மேற்பார்வையாளர் வந்து தொலைக்க வேண்டும்! உடனே அவருக்கு வணக்கம் கூறிவிட்டு, வகுப்புப் பிள்ளைகளைப் பார்த்து, ''பார்த்தீர்களா, ஆரஞ்சு! உலகம் இதுபோலவே உருண்டையானது. இதே மாதிரி மேலும் கீழும் சிறிது தட்டையாக இருக்கும். தன்னைத் தானே இப்படிச் சுற்றி...'' என்று பாடம் நடத்தினேன். வந்த அதிகாரி என்னை வெகுவாகப் பாராட்டிவிட்டு அடுத்த வகுப்புக்குப் போய்விட்டார்!

**சேலம்,** — **ஏ. கனகபூஷணம்,**

**பாலும் தேனும்**

திடீரென விருந்தினர் இருவர் வந்துவிட்டனர். இருந்த பாலில் சொட்டுப் பாக்கியின்றிக் காப்பி கலந்து கொடுத்தேன். அவர்களில் ஒருவர் தாம் காப்பி சாப்பிடுவதில்லை என்றும் பால் இருந்தால் அருந்துவதாகவும்





கூற, ஒரே [illegible] சர்க்கரையும் தீர்ந்து விட்டது! குழந்தைக்கு வாங்கி வைத்திருந்த அமுல் ஸ்பிரே நினைவுக்கு வர அதைக் கரைத்து மாமியார் வைத்தியத்துக்காக வைத்திருந்த தேனில் இரண்டு ஸ்பூன் விட்டுக் கலந்து கொடுத்தேன். 'ஆகா! இவ்வளவு சுவையான பால் வாழ்நாளில் சாப்பிட்டதில்லை' என்று கூறி மகிழ்ந்தார் அவர்!

**சென்னை-80,** — **டி. மைதிலி,**

**வோட்டுக்குப் பத்து ரூபாய்!**

கடந்த பொதுத் தேர்தலில் நான் வாக்குப் பதிவு அதிகாரி. ஒரு மூதாட்டி வாக்குப் பதிவு செய்து விட்டு நேராக என்னிடம் வந்து ''வோட்டுப் போட்டால் பத்து ரூபாய் தருவதாகச் சொன்னாங்களே'' என்று கூறிச் சத்தியாக்கிரகம் பண்ண

ஆரம்பித்துவிட்டான்! எல்லா ஏஜெண்டு களிடமும் அனுமதி பெற்று என் பாக் கெட்டிலிருந்து ஒரு ரூபாய் எடுத்துக் கொடுத்து அவனை அனுப்பி வைப்பதற்குள் போதும் போதுமென்றாகி விட்டது.

இளங்கார்குடி, கோ. பாஸ்கர்.

**கடுவன் பூனையின் கருணை!**

''சோமு இன்னிக்கு நம்ம கடுவன் பூனை என்ன செய்தது தெரியுமா?'' என்று கேட்டுக் கொண்டே வேகமாக என் வீட்டி னுள் நுழைந்த நண்பன் ரகு. அங்கே அதே கடுவன்பூனை — பிராஞ்ச் மானேஜர்— அமர்ந்திருப்பதைக் கண்டு திகைத்து. மென்று விழுங்கினான். ''சாருக்கு எவ்வளவு நல்ல மனசு பார்த்தியா, ரகு? நான் காய்ச் சல்னு லீவு போட்டதும் வீடு தேடி விசா ரிக்க வந்திருக்கார் பாரு'' என்று ஐஸ் வைத்து ஒரு மாதிரி சமாளித்தேன்.

திருச்சி, எஸ். சோமசுந்தரம்.

**எத்தனை பவுன்? என்ன மோஸ்தர்?**

பெரிய திருமணத்துக்குப் போன இடத் தில் என் கழுத்திலிருந்த செயினைத் தொலைத்து விட்டேன். உடனே எல்லோரும் அனுதாபத்துடன் 'எத்தனை பவுன் என்ன மோஸ்தர்' என்று விசாரிக்க ஆரம்பித்தனர். எனக்குப் போதும் போதும் என்றாகிவிட் டது. காரணம் அது கவரிங் செயின். அதைக் கூறவும் வெட்கம். நல்லவேளை ஐந்து வயதுச் சிறுமி ஒருத்தி தூண் மறை வில் விழுந்து கிடந்ததாகக் கொண்டு வந்து கொடுக்கவும் எனக்கு ''அப்பாடா'' என் றிருந்தது.

பாண்டிச்சேரி, இரா. தேவசேனு.

---

ராகமாலிகா வழங்கும் பட்டுப்புடவையைக் குலுக் கல் முறையில் பரிசாகப் பெறும் அதிர்ஷ்டசாலி:
கோ. 'பாஸ்கர். இளங்கார்குடி (அஞ்சல்)
கபிஸ்தலம் (வழி) 614203.
தஞ்சை (மா. வ.)

---

ஐந்து நட்சத்திர ஹோட்டல் முதல் தெருவோர நடமாடும் உணவகம் வரை ஓர் அலசல்....



## வட்டமேஜை

● ஒரு எழுத்தாளர் ஒரே சமயத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட பத்திரிகையில் தொடர் கதை ஆரம்பிக்கலாமா என்பது ஒரு பொது பிரச்னை. அதைப்பற்றி நான் எழுதியதும், தாங்கள் அதை வெளியிட்டதும் தவறில்லை. ஆனால் இது சம்பந்தமாக ஸ்ரீரங்கம் வாசகர் ஏளனமாக என் பெயரைக் கூடத் திரித்து எழுதிய வசை வரிகளை வெளியிட்டதன் மூலம் என் மீது தங்களுக்குள்ள காழ்ப்புணர்ச்சியை வெளிப்படுத்தியுள்ளீர்களே ஒழிய, பொறுப்புள்ள, பண்புள்ள ஒரு பத்திரிகையாசிரியராகத் தாங்கள் நடந்து கொள்ளவில்லை.
சென்னை—4, ஹேமா ஆனந்ததீர்த்தன்

● 10.2.85 இதழில் ''பிரிட்டிஷ் போர்க் கப்பல் ''பிரின்ஸ் ஆஃப் வேல்ஸ்'' பற்றிய துணுக்கு முற்றிலும் தப்பான விவரம். ''பிரின்ஸ் ஆஃப் வேல்ஸ்'', ''ரிப்பல்ஸ்'', என்ற இரண்டு பிரிட்டிஷ் போர்க் கப்பல்களும் ஜப்பானியப் போர் விமானங்களின் குண்டு வீச்சுக்கும் டார்பிடோ தாக்குதலுக்கும் உள்ளாகி மூழ்கின.
சென்னை—20, டி. ஆதிராஜ்.

(மேற்படி துணுக்கு சரித்திர உண்மைகளுக்குப் புறம்பானது என்று வேறு சிலரும் சுட்டிக்காட்டி எழுதியுள்ளனர். நன்றி. - ஆசிரியர்)

● நமது தமிழ் வாசகர்கள் பிரதமர் ராஜீவுக்கு அள்ளி வழங்கியிருக்கும் மூன்று பக்க ஆலோசனைகள் பிரமாதம். 'ராஜீவுக்கு ஒரு அட்வைஸ்' பக்கங்களை அப்படியே மொழி பெயர்த்துப் பிரதமருக்கு அனுப்பலாமே?''
கோனுப்பட்டு, பொன்நிலவன்.

● உலகம் சுற்றிய வொர்சாரியாரின் பேட்டியைப் பார்த்தேன். அவருடைய வேதனை நெஞ்சை நெகிழச் செய்து விட்டது.
மன்னார்குடி வி. அமிர்தலிங்கம்.

● ஆர் (வலர்) வி. அவர்கள் ஆற்றிய அரும்பணிகளைப் படித்தேன். ஒரே வார்த்தையில் அது 'மார்வெலஸ்'
முகப்பேர் கே. எஸ். எஸ். மணியன்.

● பெற்ற குழந்தை தன் எதிரிலேயே கஷ்டப்படுவதை எந்தத் தாயாலும் பொறுக்க இயலாது. குழந்தையின் மன உறுதியும், நம்பிக்கையும் நிச்சயம் அவள் கணவனின் உயிரைப் பாதுகாக்கும்.
காரைக்குடி, எஸ். பிரபா.

● தலையங்கம் (17.2.85) படித்தேன். பிறப்பு, இறப்பு பதிவிலிருந்து தொழில்(அ) வியாபாரம் செய்வது வரையிலான விளக்கங்கள் கண்ணில் இரத்தம் வடியச்செய்வன. இந்த அவல நிலையை ஒழிக்க மைய அரசும் மாநில அரசும் முயலக் கூடாதா?
சென்னை—56, டாக்டர் நாவலர் தாசன்.

● இந்த வார அட்டைப்படம் இந்த (இளைஞர்) ஆண்டினை மனக்கண்ணில் கொண்டு நிறுத்தியது.
சென்னை—4, மயிலை. கோபி.

● இளைஞர் ஆண்டில் 'திரு. சண்முகம் (துப்பாக்கி சண்முகம்) தேசிய ரிகார்டை முறியடித்தது — பல துறைகளில் உள்ள துடிப்பான இளைஞர்களுக்கும் ஒரு உற்சாகம் தரும் ''டானிக்''
மயிலாடுதுறை. தேரழுந்தூர் பி. சுப்பு.

● 'நாக சத்தியம்' கதையைவிட ஓவியம், முகத்தில் முத்து முத்தாக வியர்வையை



நிற்க வைத்துவிட்டது.
வியாசர் காலனி, திருமதி. நாராயணராவ்.

● தஞ்சையிலிருந்து திருச்சிக்குச் சோழன் போக்குவரத்துப் பேருந்து ஒன்றில் சென்று கொண்டிருந்தேன். ஒரு வாலிபர் திடீரென்று சைக்கிளைப் பேருந்தின் குறுக்கே கொண்டுவர, ஓட்டுநர் சரேலென்று ஒடித்து பேருந்தை திசை திருப்பி நிறுத்தினார். சைக்கிளில் வந்த வாலிபர் மிகச் சிறிய காயத்துடன் தப்பித்துக் கொண்டார். பேருந்திலிருந்த பயணிகள் அனைவரும் ஓட்டுநரை மிகவும் பாராட்டினர். ஆனால் கீழே விழுந்த வாலிபருடன் பத்து, பதினைந்து பேர் சேர்ந்து கொண்டு ஓட்டுநரை வம்புக்கிழுத்துச் சண்டை போட ஆரம்பித்தனர். இறுதியில் அவர்கள் நஷ்ட ஈடாகக் கேட்ட 100 ரூபாயிலிருந்து வாதாடி குறைத்து ரூ. 25—ஐ ஓட்டுநர் கொடுத்த பின்புதான் பேருந்தை எடுக்க முடிந்தது. ஓர் உயிரைக் காத்ததுடன், செய்யாத தப்புக்கு அபராதமும் செலுத்தினார் ஓட்டுநர். இப்படி எங்கு சிறிய விபத்து என்றாலும் அநீதியான முறையில் பணம் பறிப்பது வழக்கமாகி வருவதானது மனவேதனை அளிக்கிறது.
திருச்சி—14. பி. நீ. சந்திரமௌலி

(கடைசிக் கடிதம் பரிசு பெறுகிறது.)

# உயிரைக் காத்துதந்த அபராதம்!

# ஆகாச கங்கை

## 8

அட்வகேட் கே. ஜி. கே. நடத்திய சொற்பொழிவு அவ்வப்போது தன்னைத் தாக்குகிறது என்பதை வசுமதி உணர்ந்திருந்தாலும், அவருடைய அறையை விட்டு வெளியேறிய போது ஒரு தெளிவு பிறந்தது.

கதை, ஒரு வாக்கியக் கதை.

அவள் அரவிந்தனுக்கு வழி விட்டால், பெரிய தொழிலதிபர் தம்முடைய மன பலவீனம் கொண்ட பெண்ணை அவனுக்குக் கல்யாணம் செய்து கொடுத்து அவனுடைய தாம்பத்திய வாழ்க்கையை இருட்டாக்கி, உத்தியோக வாழ்க்கைப் பாதைக்கு எண்ணற்ற விளக்குகளைப் போட்டுப் பிரகாசமாக்குவார்.

வசுமதி மனம் தளராமல், நிலை குலையாமல் கே. ஜி. கே. கேட்ட அன்றைய கேஸ் பட்டியலை எடுத்துக் குமாஸ்தா சீனு மூலம் கொடுத்து அனுப்பினாள்.

மற்ற ஜூனியர்கள் இன்னும் வர ஆரம்பிக்கவில்லை. அட்வகேட் தன்னை மறுபடியும் உடனேயே அழைக்க மாட்டார் என்கிற தைரியத்தில் சீனு சீவலைப் போட்டு மென்று கொண்டே கும்பகோணம் வெற்றிலையைத் தன் மங்கிய வேட்டியில் துடைத்து மேலும் அழுக்காக்கிவிட்டுச் சுண்ணாம்பைத் தடவினான். வசுமதியின் அருகே வந்தான். அவள் அவனை உதாசீனம் செய்து மேஜை மீது இருந்த காகிதங்களை ஒழுங்குபடுத்துவதில் முனைந்தாள். மனம் முழுக்க அரவிந்தன் அடைத்துக் கொண்டிருந்தான்.

''வசுமதி!'' என்றான் சீனு, வெற்றிலைக் காம்பையும், வயிற்று நரம்பையும் கிழித்துக் கொண்டே.

அவள் அவனை ஏறிட்டுப் பார்க்காமல், ''உம்...'' என்றாள்.

இப்போது வாயில் வெற்றிலை, சீவலுடன் உறவாடத் தொடங்கியது.

''சார் என்ன சொல்றார்?''

''நீங்களே போய்க் கேளுங்கோ...''

''சத்தியமா நான் கோள் மூட்டலை!'' என்றான் சீனு. பன்னீர்ப் புகையிலை ஒரு சின்னஞ்சிறு எள் உருண்டையாக அரைந்து கொண்டிருக்கும் கலவைக்கு மணம் சேர்க்க ஓடியது.

''என்ன உளர்றீங்க?''

''நீயும் அரவிந்தனும் பல மாசமாப் பழகறீங்கன்னு எனக்குத் தெரியும், வசுமதி. ஆனா நான் சொல்லலை அவர்கிட்டே.''

''சீனு சார்!''

''என்ன?''

''நீங்க உங்க வேலையைப் பார்த்துண்டு போறேளா...? இது லாயர் ஆபீஸ். கதை பண்ற ஆபீஸல்ல...''

''சார் மட்டும் பேசலாமாக்கும்.''

''ஷட் அப்.''

சீனு சிரித்தான். விஷமம் கொட்டியது. மெதுவாக டைப்ரைட்டிங் மெஷினை நோக்கி நகர்ந்தான்.

வசுமதிக்கு வேலையில் மூளை செல்லவில்லை. அவளால் ஸீனியர் கே. ஜி. கே. யையும் தாரக்ராமையும் அலட்சியப்படுத்தி அரவிந்தனுடன் ஏற்பட்டிருக்கும் தொடர்பைக் கல்யாணத்தில் உறுதிப்படுத்த முடியும். ஆனால் விளைவுகள்? அவளுக்கு எந்தவிதமான விபரீதமும் ஏற்படாது. ஆனால் தாரக்ராம் சும்மா இருப்பாரா? அவரைப் பற்றி அவளுக்கு விவரமாக ஏதும் தெரியாது. ஏதோ ஓரிரு முறைகள் அவருடைய பெயரை அரவிந்தன் பேச்சோடு பேச்சாகக் குறிப்பிட்டிருக்கிறான். தன் தந்தையின் அத்தியந்த நண்பர் என்றும் ஒன்றாக ஒரே நாளில் வேலையில் சேர்ந்த அவர்களில் அப்பா பின் தங்கி இறந்து போனார். தாரக்ராம் உச்சியை அடைந்து கட்டிய கொடியைப் பிடித்துக் கொண்டு நிற்கிறார் என்றும் கூறியிருக்கிறான். ஒரு சமயம் அரவிந்தன் சொன்ன உண்மைக் கதையும் நினைவுக்கு வந்தது.

இரண்டு நண்பர்கள் ஒரு ஊரிலிருந்து ஒரே பஸ்ஸில் ஏறி, ஒரே ரயிலில் பிரயாணம் செய்து மெட்ராஸ் வந்து ஒரே ஓட்டலில் சிப்பந்திகளாகச் சேர்ந்தார்கள். ஒருவன் ஜாங்கிரிக்கு அரைப்பான். இன்னொருவன் ஜாங்கிரி பிழிவான். பிழிகிறவனுடைய முகராசி, அவனை முதலாளிக்குப் பிடித்து விட்டது. மெல்ல மெல்ல அவன் முன்னேறி, கல்லாப்பெட்டிக்கே வந்தான். நாளடைவில் தம் ஒரே பெண்ணையும் கொடுத்தார். கண்ணையும் மூடினார். மூடுகிற போது மூன்று ஓட்டல்கள் சொந்தம். இரண்டு பேர்களுக்கும் அறுபது வயது ஆன போது ஒருவன் இன்னும் ஜாங்கிரிக்கு அரைத்துக் கொண்டிருந்தான். இன்னொருவன் காரைவிட்டு இறங்கவில்லை! தன் அப்பாதான் ' ஜாங்கிரிக்கு அரைத்தவர் என்று சொல்லாமல் அரவிந்தன் உணர்த்தினான் என்று வசுமதிக்குப் புரிந்தது.

இப்போது அந்தக் கதை மனக்கதவைத் தட்டிக் கண்முன் நின்ற போது, அப்பாவுக்குக் கிடைக்காத அதிர்ஷ்டம் ஏன் பிள்ளைக்காவது வரக் கூடாது என்ற கேள்வி வசுமதியின் மனத்தில் எழுந்தது. அவள் பிடிவாதமாக இருந்தால் அரவிந்தன் அவள் கணவனாக முடியும். ஆனால் அவனுக்கு வரக்கூடிய உன்னதமான வாய்ப்புகள் எட்டிக்

**பி. வி. ஆர்.**

கூடப் பார்க்காது. தாரக்ராமின் பெண்ணைப் பற்றியும் சிந்தனை ஓடியது. அவளுடைய பெயர் என்ன? அரவிந்தனுக்குத் தெரியும். ஆனால் இதுவரை சொன்னதில்லை. சொல்ல வேண்டிய அவசியம் ஏற்பட்டதில்லை. அவள் அம்மாவை இழந்தவளாம். ஏதோ ஒருவித சித்தப் பிரமையோ மனப்பிராந்தியோ அவளை வாட்டுகிறதாம். இடைவிடாத அன்பாலும் அரவணைப்பாலும் தான் அவளுக்கு மறுபிறவி கொடுக்க முடியுமாம்.

திடீரென்று வசுமதிக்கு எரிச்சலும் அலுப்பும் பீறிட்டு வந்தன. கோடிக்கணக்கான பிள்ளைகள் இருக்கையில், தாரக்ராம் ஏன் அரவிந்தனைத் தேர்ந்தெடுக்க வேண்டும்? அதேசமயம் சிந்தனை வேறுவிதமாகவும் ஓடியது. எந்தப் பிள்ளையானாலும் அவளுக்குச் சம்பந்தப்பட்டவர்களும் இந்தக் கேள்வியைத்தானே கேட்டுக் கொள்ளுவார்கள்? அவள் ஏன் அரவிந்தனைச் சந்தித்தாள்? பழகினாள். காதலித்தாள்?

வசுமதிக்கு மூச்சு அடைத்துக் கொண்டு விட்டதான பயம் பிறந்தது. எழுந்தாள். வெளியே வந்தாள். பங்களாவுக்கு முன் ஒரு சிறு நந்தவனம். இரண்டு உயர்ந்த கமுகு மரங்களுக்கு இடையே நான்கு சிமெண்ட் பெஞ்சுகள். ஒரு குறிப்பிட்ட பெஞ்சில் உட்கார்ந்தால், பங்களாவிலிருந்து அவளைப் பார்க்க முடியாது.

இளம் வெய்யில் அவள் முகத்தில் படரப் பிரச்சினைக்குத் தீர்வு காண்பது எப்படி என்று யோசிக்கலானாள். ஜூனியர்கள் வேணுவும், மெய்யப்பனும் ஸ்கூட்டரில் வந்ததைக் கண்டும் உணர்ந்து கொள்ளாமல் யோசித்தாள்.

அவளுடைய வீடு முதல் அத்தியாயமாக ஆரம்பித்தது. அப்பாவும் சரி, அம்மாவும் சரி, முழுக்க முழுக்கக் கர்னாடகம். ஊராருக்காகப் பாலைக் குடித்துப் பழகியவர்கள். சணக்கற்ற கிட்டிய, சமீபமான, தொலைதூர உறவினர்களுடைய விமர்சனங்களுக்கும் ஏச்சுப் பேச்சுக்கும் செவி சாய்த்து பயப்படுகிறவர்கள். என்னதான் அப்பா உள்ளூற அரவிந்தனிடம் வெகு சரளமாகப் பேசினாலும், அவர் வந்த போதெல்லாம் அம்மா காப்பியை நீட்டினாலும், இருவருக்கும் உள்ளூற ஒருவிதக் கசப்பு இருக்கிறது. சீதாவும், கற்பகமும் முப்பது, இருபத்தேழு வயதுகளில் பெண்மையில் இயற்கை புயலாக அல்லி வீசும் ஆசைகளுக்கும் மோக தாப விரகங்களுக்கும் ஈடுகொடுத்துச் சமாளித்து, சாதுக்களாக அலுவலகங்களுக்குப் போய் வருகையில், ஏன் மூன்றாவது பெண்



கெட்டிக்காரி என்ற திமிரில் ஒருவனோடு பழகி, வீட்டுக்கே அழைத்து வருகிறாள்? அவர்களுடைய அந்தரங்கத்தில் அரவிந்தனும், வசுமதியும் எல்லையைக் கடந்திருப்பார்கள் என்ற எண்ணம் இருப்பதை அவள் அறிவாள். ஒருமுறை, நாள் தவறியபோது அம்மா தனியாக அழைத்து, 'என்னடீ பாவி, ஏதானும் ஆயிடுத்தா?' என்று கேட்டாள். எத்தனை எடுத்துச் சொல்லியும் கேளாமல் உடனடியாக லேடி டாக்டரிடம் ரகசியமாகப் போகவும் கட்டளையிட்டாள். இப்பேர்ப்பட்ட பெற்றோர்கள், இரு பெண்களைக் கடந்து மூன்றாவது பெண்ணை மணமேடையில் உட்கார வைக்க மாட்டார்கள். இப்போதைக்கு அவர்களுக்காகக் கல்யாண மண்டபங்களை 'புக்' செய்யவும் சூசகங்கள் இல்லை. சீதாவுக்கு நட்சத்திரம் மூலம். மண்டையைப் பிளக்கும் ஜலதோஷம் போல செவ்வாய் தோஷம் வேறு. மகாலிங்கபுரம் கோவிலில் அப்பா வாராந்திர மணமகன் பட்டியல் வாங்குவதில் குறைச்சல் இல்லை. அம்மா இல்லாத பிள்ளை கிடைத்தால் செவ்வாய் தோஷம் அடிக்கிறது. தோஷ சாம்யம் சரியாக இருந்தால் பிள்ளையின் அம்மாவும், அப்பாவும் கல்லு குண்டாக இருக்கிறார்கள்.

இந்த நிலையில் வசுமதி என்ன செய்ய? அவள் எப்போதும் யதார்த்த வாதி. உலகத்திலுள்ள அத்தனை பேரும் இருபத்தேழு நட்சத்திரங்களில் ஏதானும் ஒன்றில்தான் பிறக்கிறார்கள். பரணியில் பிறந்தவன் தரணியை ஆளாமல் கொத்தடிமையாகி இருக்கிறான். ரோகிணியில் பிறந்த ஒருவனுடைய எல்லா மாமாக்களுமே கொடிகட்டிப் பறக்கிறார்கள். ஒருவன் கூட கம்சன் இல்லை. ஆனால் அவளால் எப்படி மற்றவர்களைத் தன் வழிக்குக் கொண்டுவர முடியும்?

அரவிந்தனுடன் பழகிக் கொண்டிருக்கையிலேயே அவள் கடைசி ஏமாற்றத்துக்கும் தன்னைத் தயார் படுத்திக் கொண்டிருந்தாள்.

**வ**சுமதி ஒரு முடிவுக்கு வந்தாள். ஸீனியர் சூட்டிய புகழாரத்தை அவள் பூரணமாக நம்பவில்லை. தான் கெட்டிக்காரி என்பதை அவளே உணர்வாள். ஆனால் அவள் நிச்சயமாகத் தமிழ்நாடு உயர்நீதி மன்றத்தில் முதல் பெண் நீதிபதியாக வரமாட்டாள்.

ஒன்றை மட்டும் அவள் உறுதியாகத் தீர்மானித்துக் கொண்டாள்.

தாரக்ராமைப் பற்றி அவளாகப் பேச்சு எடுக்க மாட்டாள்.

அவருடைய பெண்ணைப் பற்றி அவளாக மூச்சும் விட மாட்டாள்.

வசுமதி இனிமேல் அரவிந்தனுக்கு இல்லை! அதற்குப் பின் அவனுக்கு யார் என்பதை அவனே முடிவு செய்து கொள்ளட்டும். 'நீங்க தயவு பண்ணி உங்க சேர்மனோட பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டு வாழுங்கள்!' என்று கூற அவள் சினிமா, நாடக நாயகி அல்ல.

அவள் மீண்டும் ஜூனியர்கள் இருக்கும் அறைக்கு வந்தபோது சீனு அவளைப் பார்த்தான். கேலியாகப் பார்க்க நினைத்தவன் அவளுடைய முகத்தைப் பார்த்ததும் மனத்தை மாற்றிக் கொண்டான்.

''உன்னை சார் வரச் சொன்னார். தேடினேன். அப்புறம் நீ தனியா பெஞ்சிலே கண்ணை மூடிண்டு உட்கார்ந்ததைப் பார்த்தேன்... டிஸ்டர்ப் செய்யக் கூடாதுன்னு பேசாம திரும்பிட்டேன்.''

''தாங்க்ஸ் சீனு சார்'' என்றாள் வசுமதி, கே. ஜி. கே. அறைக்குள் நுழையும் முன்பு.

**வ**சுமதியின் பிடிவாதமான முடிவுக்கு அடிப்படையான காரணம் தாரக்ராம்தான் என்று தன்னுள் உறுதிப்படுத்திக் கொண்ட அரவிந்தன் நீண்ட நேர மௌனத்திற்குப் பின் பேசினான்:

''நீ டெல்லிக்குப் போன விமானத்திலே தான் என் கம்பெனி சேர்மன் தாரக்ராமும் போனார்.''

''யாரு? உங்க அப்பாவோட அத்தியந்த சிநேகிதர்னு முன்னே எப்பவோ சொல்லியிருக்கீங்களே, அவரா?''

''ஆமாம். அவர்தான் உன் மனசை மாத்திட்டாரோன்னு தோணித்து...''

வசுமதி அவனை கடுமையாகப் பார்த்தாள்.

''யூ ஷுட் பி அஷேம்ட் ஆஃப் யுவர் ஸெல்ஃப் அரவிந்த்!''

''யெஸ்... யெஸ்... யூ ஆர் கரெக்ட்... வெரி வெரி கரெக்ட்... ஐ'ம் அஷேம்ட் ஆஃப் மை ஸெல்ஃப்...''

''கம் ஆன் அரவிந்த்... சியர் அப்! உங்க சேர்மன் உங்களை ஆபீஸ்லே டீஸ் பண்றாரா... உங்க வேலையிலே ஏதானும் குத்தம் கண்டுபிடிச்சு...''

''நோ... நோ...'' அரவிந்த் கத்தினான். ''அப்படியெல்லாம் பண்ணியிருந்தா நான் பிள்ளையாருக்குத் தேங்காய் உடைச்சிருப்பேனே... அவர் தம் பெண்ணை நான்தான் கலியாணம் பண்ணிக்கணும்னு மல்லுக்கு நிக்கறார். போராடறார்... கண்ணீர் வடிக்கறார்... கால்லே விழறார்!''

''ஓ, ஐ ஸீ!'' என்றாள் வசுமதி. அவள் மனக்கண் முன் பார்த்திராத தாரக்ராமும் பார்த்துப் பழகிய கே. ஜி. கே. யும் நின்றார்கள்.

''உன்னுடைய பர்த்டேக்கு வரவொட்டாம அடிச்சவரே அவர்தான்... சாயங்காலம் ஏழு மணிக்கு ஓட்டல் டாஜுக்கு வரச் சொன்னார்... பன்னிரண்டு மணிக்குத்தான் விட்டார்...''

''ப்ரெயின் வாஷ் பண்ணினாரா?'' வசுமதி வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு பழி வாங்கினாள்.

''ப்ரெயினே இல்லாமப் பண்ணிட்டார். வசு.... என் அப்பா ஆசைப்பட்டாராம்... என் அம்மா கற்பகாம்பாள் சந்நிதியில் அவளுக்கு நேரா நின்னுண்டு அவர் மனைவிக்குச் சம்மதம் கொடுத்தாளாம்.... அவர் மனைவி கடைசி மூச்சை ஸ்விட்சர்லாந்தில் விட்டா. விடறதுக்கு முன்னாடி தன் ஆசையை நிறைவேற்றி வைக்கணும்னு அலை பாய்ஞ்சாளாம்... இப்ப நான் என்ன செய்யறது, வசு.''

''நம்ப பழக்கம், பத்துப் பதினைஞ்சு மாசப் பழக்கம் அரவிந்த்... ஆனால் உன் அப்பா அம்மா, அவர் அவரோட மனைவியோட ஆசைகள் பல வருஷ ஆசைகள். நல்லவேளை, என் மனசோட முடிவுக்கு ஏத்தபடி உங்க கதையும் வேற எடத்திலே ஆரம்பிக்கப் போகிறது...''

''என்னாலே உன்னை மறக்க முடியலையே, வசு...?''

''என்னாலேயே முடியறப்ப, ஏன் உங்களாலே முடியாது... சேர்மனே தம் பெண்ணைத் தர்றேங்கறப்ப, நீங்க தானா வர்ற தேவதையைக் காலாலே எட்டி உதைக்கப் படாது...''

''அப்ப நாம பழகினது... பேசினது... சிரிச்சுக் களிச்சது... எல்லாம் பொய்யா..''

''பொய் இல்லை... உண்மையான சுகமான சொப்பனம்... நேத்து நான் முழிச்சுப் பார்க்கறப்ப... வாழ்க்கையிலே சொப்பனங்களைக் காட்டிலும், பெரிய பெரிய விஷயங்களும் சாதனைகளும் இருக்குன்னு ஞாபகம் வந்தது... அந்த ஞானம் உங்களுக்கும் வரணும், அரவிந்த்!''

''அவ பேரு மாயா!'' உணர்ச்சியற்ற குரலில் அரவிந்தன் கூறினான்.

''ஆஹா... என்ன அழகான பேர்! மாயா... மாயா அரவிந்தன். சொல்றப்ப வாயே நெறைஞ்சு போறது... மாயா அரவிந்தன். மாயா...''

''ஸ்டாப் இட், வசு.''

''தாங்க்யூ, அரவிந்த்... நான் வரேன்.''

''நீ என்னைவிட்டுப் போறதுன்னு முடிவு எடுத்திட்டே இல்லே...''

''டெஃபனட்...''

''நான் மாயாவைக் கல்யாணம் செய்துக்க முடியாதுன்னு அடிச்சுச் சொல்லிட்டா...?''

''தட் இஸ் யுவர் டிஸிஷன். யுவர் ப்ராப்ளம்...''

''வசு!''

''இதப்பாருங்க அரவிந்த்! நீங்க யாரைக் கலியாணம் பண்ணிக்கப் போறீங்கங்கறது என் பிரச்னை இல்லை... நான் உங்களைக் கல்யாணம் பண்ணிக்கப் போறதில்லேங்கறது தான் பாயின்ட்... பட் நோ ஹார்ட் ஃபீலிங்ஸ்... லவ் இஸ் எ குட் எக்ஸ்பீரியன்ஸ்... ஆனா லவ்தான் எல்லாம்னு எனக்குப் படலே... நான் என்னுடைய காதலை நட்பா மாத்திட்டேன்...''

''எவ்வளவு அழகா, வாயாறப் பொய் சொல்றே, வசு...!''

''நீங்களே பாருங்க... நான் என்னென்னிக்கும் உங்க ஃப்ரண்ட்தான். யூ ஆர் எ குட் மேன்... எக்ஸலன்ட் காரக்டர்... ஆனா இப்ப ஒண்ணு சொல்றேன்.. அதைச் சொல்ல எனக்கு உரிமை இல்லைன்னு எனக்குத் தெரியும். இருந்தாலும் சொல்றேன். உங்க அம்மா அப்பாவோட ஆசைகளை நிறைவேத்தி வைச்சாலே, அவங்க ஆத்மாக்கள் பூரிக்கப் போகும்!''

''இந்த மாயா ஒரு மெண்டடல் கேஸாம், வசு!''




**அச்சு வடிவில் ஒலித்த மணி!**

(1934-ம் ஆண்டில்] ஆனந்தவிகடனில் ஓர் இதழில் முதுபெரும் எழுத்தாளர் த. நா. சேனாபதி கதையொன்று எழுதினார். அக்கதையை அச்சுக் கோத்த ஊழியர் முகமலர்ச்சியோடு ஓடிவந்து, ''சேனா'' அவர்களைப் பாராட்டிப் பூரித்தார். அதற்கான காரணம் இதுதான்: கதையில் ஒருவன் தின்பண்டம் விற்கும்போது மணியடித்துக் கொண்டே வந்ததை ''ஙிணி, ஙிணி''யென்று மணியடித்து...'' என்று எழுதியிருந்தார். அதுவரை பயன்படாது தேயாமல் பளபளப்பாயிருந்த ஙி டைப் அப்போது பயன்பட்டதே என அச்சுக் கோப்பவர் மிகவும் பூரித்துப் போனார்!

—மின்னூர் சீனிவாசன்.

''ஓ, ஐ ஸீ! அதான் தவிக்கறீங்களா?''

''இல்லே... அதனாலே தவிக்கலே... உன்னை மனைவியாக்கிக் கொள்ள முடியாத நிலை எப்பப் பிறந்தாச்சோ அப்பவே நான் மாயாவைப் பத்திக் கவலைப் படலே... நான் கணவனா வாய்ச்சா, அவ சரியாயிடுவான்னு தாரக்ராம் நினைக்கிறார்...''

''உங்ககிட்டே நிச்சயமா ஒரு மந்திரசக்தி இருக்கணும்... இல்லாமப் போனா சவாலைச் சமாளிக்க உங்களாலே முடியணும்னு அவர் நம்பணும்... நான் வரேன், அரவிந்த்!''

''வசு!''

''விஷ் யூ ஆல் தி பெஸ்ட்... உங்க கல்யாணத்துக்கு நான் வருவேன்... டேக் இட் ஆஸ் எ சாலஞ்ச்சி... ஐ வில் ஆல்ஸோ ஹெல்ப் யூ இன் யுவர் ஸக்ஸஸ்.''

அரவிந்தன் பேச வாயெடுத்தான். அதற்குள் வசுமதி, கைப்பையைத் தோளில் மாட்டிக் கொண்டு நகர ஆரம்பித்தாள்.

மூன்றும் நாள் டெலிபோனில் தாரக்ராமுடன் தொடர்பு கொண்டான்.

அன்று மீனம்பாக்கத்தில் பம்பாய் விமானம் ரத்து ஆன விஷயம், பல மணி நேரங்களுக்குப் பிறகுதான் தெரிந்தது.

மறுநாள் பதினைஞ்சரை மணி ஃப்ளைட்டில் புறப்பட்ட அவன் பாம்பே சென்ட்டார் ஓட்டல் அறைக்குள் பிரவேசித்த போது, மணி இரண்டு.

தாரக்ராமுடன் பேசினான்.

அவருடைய பதிலில் பெரிய மனிதரின் திருப்தி ஒளிந்திருந்தது. (தொடரும்)



# வைகையில் வருகிற கலாட்டா!

அரசு மணிமேகலை

''உம்... உம்... உம்...'' —ஒருமாதிரி தான வயத்தோட, அமக்களமா 'உம்' கொட்டிண்டிருந்தார் என் ஆத்துக்காரர்.

''நான் எப்பவோ சொல்லி முடிச்சுட்டேன். மதுரையிலேர்ந்து அப்பாவும், அம்மாவும் 'வைகை'யிலே வரப் போறான்னுட்டு... சொல்லப் போனா, கரெக்டா பதினேழு தடவை சொல்லிட்டேன்...''

இந்த மனுஷனோட இதுவே ஒரு போராட்டம்... என்னோட அப்பா, அம்மா வந்தா, இவருக்கென்ன போச்சு? அப்பாவும், அம்மாவும் இந்த வீட்டிலேயேவா ஒக்காந்துண்டிருக்கப் போறா? ஒரு மாசமோ? ஒண்ணரை மாசமோ? போயிண்டிருக்கப் போறா...

அப்பாவுக்கானா, கொஞ்சம் காது சரியாக் கேக்காது! ஒரு தரத்துக்கு ரெண்டு தரம் கேட்பார்... இவர் அந்த மூணு மாசத்துல, பல்லைக் கடிச்சுண்டு, ''தொணப்பல், தொணப்பல்''னுட்டு முந்நூறு தரம் சொல்லிக் காட்டிடுவார்... அப்பா அப்படி என்ன பிரமாதமா கேட்டுடப் போறார்...?

''என்ன மாப்பிள்ளே? ஷேவ் பண்ணிண்டிருக்கேளா?''

''ம்! (பார்த்தாத் தெரியலையா? சுத்தப் பிடுங்கல்...' இதை மெள்ளமா சொல்லிப் பார்...) ஆமாம் மாமா! சும்மா இப்படி ஷேவ் பண்ணிண்டிருக்கேன்...''

''பேஷா... பேஷா... பண்ணிக்குங்கோ!'' (''என்னமோ ரெண்டாங் கல்யாணத்துக்கு ஆசீர்வாதம் பண்றாப்பலே, ஜம் சொல்றதைப் பார்...'') பற்களைக் கடிச்சுண்டு வார்த்தைகளை மென்று விழுங்குவார்.

''என்ன மாப்பிள்ளே... என்ன சொல்றேள்?

''ஒண்ணும் இல்லே... ஷேவ் பண்ணிண்டிருக்கேன்...''

''ஏன் இப்படி அலர்றேள்? மெள்ள சொல்லப் படாதா? மாப்பிள்ளை வரவர ரொம்ப இறைஞ்சு பேசறார் கோமதி... ஆமா மாப்பிள்ளை... ரேஸர் புதுசா?''

''(''உம்ம வயசு ஆச்சு இதுக்கும் — இதுவும் அறுக்கும்! நீரும் அறுப்பீர்... சனியன்! சனியன்!'') இல்லே மாமா! ரொம்பப் பழசு... 'பாரின்' செட்டு...''

''ஓஹோ! 'பாரின்' செட்டா? ஜெர்மனியா? அமெரிக்காவா?''

ஆத்திரமா எதுக்குத் திரும்பறது? பேசாம பதில் சொல்லிடலாமோல்லியோ... திரும்பிய வேகத்துலே, 'சர்ரக்... சர்ரக்...' இரண்டு இடத்துலே வெட்டு...

''ஜப்பான் மாமா!'' ஓவென்று கத்திச் சொல்வார்...

''ஜப்பானா மாப்பிள்ளே... நான் அப்பவே நினைச்சேன்... பாத்தா ஜப்பானுட்டமா இருக்கேன்னுட்டு!'' அப்பா பெருமிதமாக, காலரை உயர்த்திவிட்டுக் கொள்வார்.

''ஆமாம்... பெரிய ஜீனியஸ்! பாத்தவுடனே ஜப்பான்னு தெரிஞ்சுண்டாச்சு... சொல்றது! அமெரிக்காவா, ஜெர்மனியா? அது வேற என்ன கேள்வி? காலங்கார்த்தாலே கழுத்தறுப்பு...''



ஆத்ரமா, அடிவயித்திலிருந்து எரிச்சல் கிளம்பிண்டு வர, இவர் உதடுகள் வேக வேகமாப் பிரிஞ்சு பிரிஞ்சு மூடறதுதான் அப்பாவுக்குத் தெரியும். பயந்து போவார்...

''என்ன மாப்பிள்ளை? என்ன பண்றது உடம்பு? என்ன கோமதி? தானா பேசிண்டிருக்கார் ஒங்காத்துக்காரர்... மாப்பிள்ளைக்கு எப்பவானு இப்படி வரதுண்டாடீ குழந்தை...!''

நரசிம்மாவதாரம் எடுத்தாப்பலே பாத்ரூம் உள்ளுக்கு ஓடுவார். அங்கே வெளிச்சம் சரியாக் கிடையாதோல்லியோ? குளிச்சு முடிச்சுட்டு வெளியே வருவாரோன்னோ... அப்பப் பார்த்தோம்னா, கன்னத்து ஓரமா ரெண்டு மூணு முடி விட்டுட்டிருப்பார்...

''பார்த்துப் பண்ணிண்டு வரக்கூடாதா?'' அப்படீன்னுட்டு ஒரு வார்த்தை தான் கேப்பேன்... வந்துடும் பாருங்கோ ஆத்திரம்... டியன் தட்டை விட்டெறிஞ்சுட்டு, திரும்ப ஓடுவார்!

ஒரு நாள் அப்படித்தான் அம்மாவைக் கண் டாக்டரண்டை அழைச்சுண்டு போகச் சொன்னேன்...

கண் டாக்டரிடம் போய்விட்டு ஆட்டோவிலே வந்து இறங்கினா... இவர் மூகத்துலே எள்ளும், கொள்ளும் வெடிச்சது... நேரே ரூமுக்குள்ளே ஓடிட்டார்; ஒரு வார்த்தையும் பேசலே...

''என்னன்னா? என்ன நடந்தது?'' மூணே வார்த்தைகள் கேட்டேன்!

''டீ! இனிமே ஒங்கம்மாவை என்னோட வெளியே அனுப்பினே... சத்தியமா உன்னை டைவர்ஸ் பண்ணிடுவேன்! ஜாக்கிரதை!'' அடிக்குரலிலே உறுமினார்.

''என்னன்னு நடந்தது?''

''இதோ பாருடீ... பன்னிரண்டாம் நம்பர் பஸ்லே ஏறினோம். இதுக்கு ஒரு சீட் கிடைச்சது... அதை ஒக்கார வெச்சுட்டு, நான் போய் முன்னே நின்னுட்டேன்...''

ராஜகுமாரி தியேட்டர் ஸ்டாப்பிங்... ''ராஜகுமாரி இறங்கு! ராஜ குமாரி இறங்கு''ன்னு கண்டக்டர் கத்தினான்.''

''அதுலே என்னன்னு தப்பு...''

''குறுக்கே ஏதாவது கேட்டியானா, பல்லைப் பேர்த்துடுவேன்... ஒங்கம்மா என்ன நினைச்சண்டாள்? இவ பேர் ராஜகுமாரி இல்லையா? தன்னைத் தான் பேர் சொல்லி இறங்கச் சொல்றாருன்னு நினைச்சண்டு, தபதபன்னு முட்டி மோதிண்டு இறங்கித் தொலைச்சுட்டா... மீச்சு மூச்சுன்னு ''மாப்பிள்ளே, மாப்பிள்ளே''ன்னு கொஞ்சலா கூப்டிருக்கா... அந்த நேரம் ஒருத்தன் இறங்கித் தொலைச்சாண்டி...

''அவ்வளவுதான், ஒங்கம்மாப் பாட்டுக்கு ''ஏன் மாப்பிள்ளே, ஏன் மாப்பிள்ளே''ன்னு ஏதோ பேசிண்டே அவன் பின்னாடியே போயிண்டிருக்கா... நான் பாட்டுக்கு 'மாமி மாமி'ன்னு கத்திண்டே ஓடறேன்! ''மாப்பிள்ளை... யார் இந்தத் தடியன்? என்ன இப்படி அலறிண்டு வர்றான்?'' அப்படின்னு அவனண்டை கேக்கறாடீ!

'''தடியன்'னுட்டு என்னைச் சொல்லலாமோடி? சொல்லலாமா?'' அவருக்கு உதடெல்லாம் துடிக்கிறது.

''என்ன கஷ்டப்படறேன்... அந்தக் காலத்து மனுஷியோல்லியோ? மனசுலே ஒன்னு வெச்சுண்டு வெளியே ஒன்னு பேசத் தெரியாதுன்னு அவளுக்கு.''

ஆனால் அவர் முகத்தைத் தூக்கிண்டு, திரும்பிப் படுத்துண்டுட்டார்... ஒண்ணுமே சாப்பிடாமே...

அப்பாவும், அம்மாவும் ஊருக்குத் திரும்பறதுக்கு ரெண்டு நாள் இருந்தது...

''ஏன்னு? இவாளை ஏதாவது சினிமாவுக்குக் கூட்டிண்டு போவோமா? பாவம்னு ரெண்டு பேரும்! மதுரைக்குப் போய்ச்சேர்ந்துட்டான்னு, ஆத்தை விட்டு வெளியிலே அடி எடுத்து வைக்க மாட்டான்னு ரெண்டு பேரும்...!''

''பேஷா அழைச்சிண்டு போயிட்டு வாயேன்... சித்த நிம்மதியா டீ. வி. யிலே 'ஒளியும், ஒலியும் பாக்கறேன்...''

அரைமணி நேரம் கெஞ்சி, அவரையும் இழுத்துண்டு போய்ச் சேர்ந்தோம்.

இண்டர்வெல் நேரத்துல, அப்பாவும் இவருமாக் காப்பி சாப்பிடக் கிளம்பினு...

ரெண்டு நிமிஷம் கூட ஆகலே... 'ஜிவுஜிவு'ன்னு முகத்திலே ஆத்திரம் அமர்க்களப் படறது... வந்து 'தொம்'முன்னு உட்கார்ந்தார்.

''என்னன்னு? நீங்க மட்டும் வர்றேள்? அப்பா எங்கேன்னு?''

''ஏண்டி! ஒங்க அப்பன் கூட மனுஷன் போவானு? அல்பம்... அல்பம்...''

''வாய்க்கு வாய் அவரை ஏன் திட்டறேள்? பெரியவா பொருந்தலேன்னு பாக்கறதே கிடையாது... என்ன பண்ணுனர் இப்போ?''

''வெளியிலே போயிப் பாரு... அல்பம்... சுத்த அல்பம்! இத்தனே அல்பமா ஒரு மனுஷனே நான் பார்த்ததே இல்லேடி...சாரவேர்க்கடலே பாக்கெட் ரெண்டு வாங்கிக் கொடுத்தேண்டி! கடை வாசல்லேயே பரப்பிரம்மம் மாதிரிப் பரப்பிண்டு ஒக்காந்துடுத்து...''

''ஏன் ஒக்காந்துட்டார்...?''

''ஒரு பாக்கெட்லே அறுபத்தாறு கடலே இருக்கு; இந்தப் பாக்கெட்லே அறுபத்தி நாலு தான் இருக்குன்னு அவனண்டை சண்டை போட்டுண்டிருக்கார்...''

திரும்பவும் எரிச்சலோட கத்தத் தொடங்கினுர்... ''சரித்தான் போயான்னு அவன் கத்தருன்...''

''வ று த் த ா த் தரேன்னு சொல்றியா?''ன்னு இவர் சொல்றுர்... அவன் ஒண்ணு சொல்ல, இவர் ஒண்ணு சொல்ல... கடை வாசல்லேயே என் மானம் கப்பல் ஏறிடுத்து...''

அம்மா தட்டுத் தடுமாறி வந்து கொண்டிருந்தாள். யார் காலே மிதிச்சாளோ? 'ஓ'ன்னு கத்தினுர் ஒருத்தர்.

''என்னடா அம்பி? காலே மிதிச்சுட்டேனு?'' அப்படின்னு சாவகாசமாக் கேட்டுட்டு, அவ பாட்டுக்கு வந்துண்டிருந்தா. 'அம்பி' யார்னுட்டுப் பார்த்தேன்... ஏறத்தாழ ஐம்பது வயசிருக்கும்!

அம்மா சீட்டண்டை வர்றதுக்குள்ளே விளக்கை அணைத்து விட்டான்...

'அம்மாடி'ன்னு அவ வந்து ஒக்கார்றதுக்கும், இவர் 'ஓ'ன்னு அலர்றதுக்கும் சரியாக இருந்தது. நான் பயந்தே போயிட்டேன்... அம்மாவானு சாவகாசமா, ''என்னடா அம்பி காலே மிதிச்சிட்டேனு?''ன்னு அலட்சியமாக் கேட்டாள்.

''அட சட்... அம்பியாவது? தும்பியாவது... மாமி! எழுந்திருங்கோ முதல்லே.. என் மடியிலேன்னு ஒக்காந்துண்டிருக்கேள்.''

இவர் நரசிம்மாவதாரம் எடுக்காத குறையாக, சீறி விழுந்தார்.

''மாப்பிள்ளே! ஒங்க மடியிலேயா ஒக்காந்துண்டிருக்கேன்... ஐயோ... எனக்கு மானம் போறதே... ஏண்டிம்மா கோமதி! முதல்லே நேக்கு' ஒரு கண்ணுடி வாங்கிப் போடு...''

ம்ம்! இதெல்லாம் பழைய கதை! போன வருஷம் வந்தப்போ நடந்த கலாட்டா இவை! ம்! இந்த வருஷம் என்ன காத்துண்டிருக்கோ?

அப்பா, அம்மா வைகையிலே இன்னிக்கு வரா... நான் காலம்பற எழுந்திருக்கிறப்பவே சந்தோஷமா எழுந்துக்கறேன்.

பார்த்தால், இவர் 'ஜம்'முன்னு டிரஸ் பண்ணிண்டு சூட்கேஸ் சகிதம் ஒக்காந்துண்டிருக்கார்...

''இதோ பார் கோமதி... நன்னு நீ கேட்டுக்கோ... ஒங்கப்பா, அம்மா இன்னிக்குத் தான் வரா இல்லேயா? கரெக்டா நான் ஆபீஸ் ஆடிட்டிங் விஷயமா ஜபல்பூர் போற மாதிரி ஏற்பாடு பண்ணிண்டேன்! மூனு மாசம் ஐயா ஜில்லுன்னு அங்கே இருந்துட்டு வரப்போறேன்! அவா அட்டகாசத்தை நீயே தனியா அனுபவிச்சுக்கோ! வரட்டுமா! டாடா! சீரியோ.''

அவர் கிளம்பி விட்டார்... நான் ''இரு, இரு''ன்னு விழிச்சுண்டு நிக்கிறேன்... 'வைகை' தடதடன்னு வந்துண்டு இருக்கும்!

''உலகிலேயே முதன்மையான பொய் ''பொதுமக்களின் அப்பிராயம்''என்று கூறப்படுவது.'' —கார்லைல்.

''அதிர்ஷ்டம் எப்பொழுதும் சுறுசுறுப்பைத் தொடர்ந்தே சென்று கொண்டிருப்பதைக் காணலாம்.''
—கோல்ட் ஸ்மித்.

''நாம் அற்பமானவை என்று ஒதுக்கித் தள்ளும் செயல்களிலேதான் இன்பத்தின் விதைகள் அமைந்திருப்பதால் அவை வீணுகின்றன.'' —ஜார்ஜ் எலியட்
தொகுப்பு : ரமேஷ்குமார்







ஆரோக்கியமான பற்களுக்கும் ஈறுகளுக்கும் என்றுமே ஆதாரம்
நம்பகமான கிராம்புத் தைலம் அது தருமே பரிகாரம்

புதிய

இதோ

# ப்ராமிஸ் டூத் பவுடர்

## காலங்காலமாக பயன்பட்டு வரும் கிராம்புத் தைலம் கொண்டது.

கிராம்புத் தைலம் கொண்ட ப்ராமிஸ் டூத் பவுடர் அளிக்கும் நன்மைகளைப் பாருங்கள்.

- வாய்த் துர்நாற்றத்தையும் பற்சிதைவுக்குக் காரணமான கிருமிகளையும் அகற்றுகிறது.
- உங்கள் சுவாசத்திற்கு புத்துணர்ச்சியையும் தூய்மையையும் தருகிறது.
- உங்கள் ஈறுகளை இதமாகத் தேய்த்துக் கொடுத்து ஆரோக்கியத்தை உண்டாக்குகிறது.
- உங்கள் பற்களுக்கு பளிச்சிடும் வெண்மையைத் தருகிறது.
- பெப்பர்மிண்ட் மற்றும் கிராம்புத் தைலத்தின் இணையற்ற சுவை.




பல்சாரா

**கிராம்புத் தைலம் கொண்ட புதிய இணையற்ற ப்ராமிஸ் டூத் பவுடர்**

CHAITRA-BLS-436 TAM

# நெருப்பு மலர்

## 31

மூன்று நாட்களாயிற்று இருத்திகா கண்களைத் திறந்து. இப்போதும் உடம்பைத் தொட்டால் அனல் பறந்தது. டாக்டர் வந்து பார்த்து மருந்து தந்து விட்டுப் போகிறார். 'இது வைரஸ் காய்ச்சல். ஜுரம் குறைய எப்படியும் நாலு நாளாகும்...' என்று சொல்கிறார். ஆனாலும் கவலையாகத் தான் இருந்தது. வெறும் கிருமிகளால் மட்டும் ஏற்பட்ட காய்ச்சலானால் மருத்துவர் சொன்ன மாதிரி பயப்படத் தேவையில்லை... ஆனால் இது அதிர்ச்சியினால் ஏற்பட்ட காய்ச்சலாக இருக்கவே எல்லோரும் பயந்து போனார்கள்.

ஒவ்வொருவராக அறைக்குள் நுழைந்து இருத்திகாவின் நெற்றியையும், கழுத்தையும் தொட்டுப் பார்த்து, சில விநாடிகள் வருத்தமும் சோகமுமாக நின்றுவிட்டு வெளியேற சாயிராம் மட்டும் பக்கத்திலேயே இருந்தான். இந்த மூன்று நாட்களும் தூக்கத்தை மறந்தான். சாப்பாட்டை மறந்துபோனான்.

ஒரு மணி நேரத்திற்கு ஒருமுறை தர்மா மீட்டரில் ஜுரவேகத்தைப் பார்த்துக் குறித்து வைத்து, யூடிகோலனில் நனைத்த துணியை நெற்றியில் இட்டு, அது காயக் காய மாற்றிப் போட்டு... பாஸ்கரப்பாவும், புவனேஸ்வரியும், ராம்சிங்கும் தாங்கள் பார்த்துக் கொள்வதாகக் கெஞ்சியும் அவன் விடவில்லை. அனந்தசாமி கூட இரண்டு மூன்று தரம் கேட்டுவிட்டார்.

''நீ போய் ஏதாவது சாப்பிட்டுவிட்டு ரெஸ்ட் எடுத்துக்கோ சாயிராம். இப்படி ராப்பகலா கண் விழித்தால் உடம்புக்கு ஆகாது. மாறி மாறி நாங்களும் கவனிச்சுக் கறோம். இப்போ நான் கொஞ்ச நேரம் பார்த்துக்கறேன், நீ போ...''

''வேண்டாம் சார்...'' என்று கெஞ்சினான் அவன்.

''நானே கவனிச்சுக்கறேன். காலேலே எழுந்து குளித்து, உடை மாற்றி, டிபனை முடிச்சுட்டுத்தான் வந்து உட்காருகிறேன். அதனால் பசிக்கலே சார். ஜுர வேகம் குறைந்து இவங்க கொஞ்சம் கண் விழிச்சுப் பார்க்கட்டும். அப்புறம் எழுந்து போயிட றேன்...''

''நீ எழுந்து போகணும்னு நான் சொல்லலே சாயிராம். களைப்பாக இருக்கப் போறி யேன்னுதான் சொன்னேன்...''

''களைப்பு என்ன சார்...? வாழ்க்கையே அடங்கிப் போய் இவங்க இப்படிப் படுத்துக் கிட்டிருக்கிறதைப் பார்க்கிற போது களைப்பு எப்படி சார் வரும்...? எங்கிருந்து வரும்? நாலு நாள் முன்னாலே தான் சார் இவங்க எல்லா விஷயத்தையும் சொன்னாங்க. அப்போ கூட நான் ரேடியோவும், டி.வி.யும் செய்தித்தாள்களும் தான் 'பஞ்சாப் பஞ்சாப்'னு அடிச்சுக்கிறதேன்னேன். அதற்கு இவங்க என்ன பதில் சொன்னாங்க தெரியுமா...? பஞ்சாப் பஞ்சாப்னுதானே அடிச்சுக்கறது? என் மனசு மாதிரி 'அர்ஜுன், அர்ஜுன்'னு அடிச்சுக்கலையே சாயிராம் னாங்க. அவங்க சொல்லி முடிக்கலே, அதற் குள் அவரோட வாழ்க்கையே முடிஞ்சு போயிடுத்தே சார்... ஏன் சார், வாழ்க்கை அநித்தியமானதுன்னு காட்ட இந்த அர் ஜுன்தானா கிடைத்தார் கடவுளுக்கு. இதோ கல்லாட்டம் யாருக்கும் எந்த உதவி யுமில்லாமல் நானில்லே? என்னை எடுத்துக் கிட்டுப் போயிருக்கக் கூடாது...? யார் யாரையோ ஸாடிஸ்ட்டுன்னு சொல்றீங் களே சார்... எனக்குத் தெரிந்து கடவுளை விட ஒரு பெரிய ஸாடிஸ்ட் இல்லே சார்...''

குமுறிக் குமுறி சாயிராம் பேசினதும் அனந்தசாமி அவன் தோளைத்தொட்டு ஆசுவாசப்படுத்தினார்.

''நீ உனக்கேற்பட்ட வேதனையைத் தாங்கிக் கொள்ள முடியாமல் இப்படிப்



பேசறே... இப்போ நாமெல்லாம் சேர்ந்து இவளுக்கு ஆறுதல் சொல்லணுமே தவிர இப்படி உடைந்து போயிடக் கூடாது சாயிராம்...''

ஆனால் ஐந்தாம் நாள் காலையில் கிருத்திகா கண்விழித்து எழுந்த போது அவளுக்கு எந்த ஆறுதலும் தேவையாக இருக்கவில்லை. துக்கம், வேதனை, எதுவும் பேச்சில் எட்டிப் பார்க்கவில்லை. சாயிராமைப் பார்த்துப் புன்னகை செய்ய முயன்றபடி கேட்டாள்.

''அப்பா எங்கே, சாயிராம்...?''

அவள் கண்திறந்து பேசிய சந்தோஷத்திலும், படபடப்பிலும் சொன்னான் அவன்.

''மாடியில் இருக்கார். இதோ போய் அழைச்சுட்டு வர்ரேன்...''

சாயிராம் போய்க் கூப்பிட்டதும் பாஸ்கரப்பாவுடன், ராம்சிங், புவனேஸ்வரி, அனந்தசாமிஎல்லோருமே ஓடிவந்தார்கள். கிருத்திகாவின் கட்டிலைச் சுற்றி நின்றார்கள். புவனேஸ்வரி மட்டும் தலைமாட்டில் புடவைத் தலைப்பை வாயில் வைத்து இறுக்கியபடி நின்றிருந்தாள்.

ஆனால் கிருத்திகாவின் பார்வை அவர்கள் யார் மீதும் ஓடவில்லை. பக்கத்தில் உட்கார்ந்த பாஸ்கரப்பாவின் முகத்தில் மட்டும் நிலைத்தது. அவரது கையைப் பற்றி ஜுர வேகத்தில் உலர்ந்து வெடித்துப் போன உதடுகளை ஈரப்படுத்த முயன்றபடி மெதுவாகப் பேசினாள் அவள்.

''நானும் உங்க கூடவே வந்துடறேன் அப்பா... என்னைக் கூட்டிண்டு போங்கப்பா...''

''வரலாம்மா...'' என்று நடுங்கும் விரல்களால் அவளது தலையை வருடினார் அவர்.



''உடம்பு சரியானதும் நீ புறப்பட்டு வர லாம். இப்போ நானும், ராம்சிங்கும் ஊமைப் போகிறோம்...''

''ம்ஹூம். நானும் இப்பவே வரேன்...''

''நான் இப்போ டில்லிக்குப் போறேம்மா. அங்கே போய் வீட்டைக் காலி பண்ணி, சாமானையெல்லாம் லாரியில ஏத்திவிட்டுத் திரும்பி வரேன். வந்து உன்னைக் கூட்டிக் கொண்டு போறேன்...''

''வீட்டைக் காலி பண்ணணுமா, ஏம்ப்பா...?''

''இனிமேல் டில்லியில் எனக்கு என் னம்மா இருக்கு...? எல்லாம் ஓய்ந்து முடிந்து போன பிறகு அங்கே என்ன வேலை...? அதனால் இனி இருக்கப் போகிற கொஞ்ச நாட்களை அமைதியாகத் தள்ள லாம் என்று சொந்த ஊரான கூர்கிற்கே போவதாக இருக்கிறேன்...''

''போவதாக இருக்கிறேம்னு சொல்லுங் கப்பா... எனக்கும் அதே அமைதிதான் தேவை. நானும் உங்க கூட வரேம்ப்பா...''

''ஒரு நிமிடம்...'' என்று இடையில் குறுக்கிட்டான் சாயிராம்.

''நீங்களும் இப்போ வரோம்னு சொல்ல லும் இருத்திகா. நீங்க எங்கே போனாலும் உங்க கூட நானும் வர்றதாக இருக்கேன்...''

அவனைத் திரும்பிப் பார்த்து மெலிதாகப் புன்னகை செய்தாள் இருத்திகா.

''நீங்க எப்படி என் கூட வரமுடியும் சாயிராம்...? நீங்கள் செய்ய வேண்டிய கடமைகள் இன்னும் பாக்கி இருக்கே...?''

''எதைச் சொல்றீங்க. சினிமாவுக்குப் பாட்டு எழுதறதையா...? உங்களுக்கு முன் னால் அதெல்லாம் எனக்குத் தூசிக்குச் சமங்க. அன்பா இருக்கிறதையும், மனித உறவுகளைக் காப்பாத்தறதையும் விடவா இதெல்லாம் பெரிசு. இனி எனக்கு சினிமா வும் வேண்டாம். பாட்டும் வேண்டாம். முன்பு சொன்ன மாதிரி ராம்சிங் மாதிரி நானும் உங்க ரெண்டு பேருக்கும் உதவியா இருக்கப் போறேன்...''

''வழக்கப்படி உணர்ச்சிவசப்பட்டுப் பட படக்கறீங்க பார்த்தீங்களா? நான் பாட்டு எழுதறதைச் சொல்லலே சாயிராம்.... அது கடமையாகாது...'' – அவள் நிதானமாகப் பேசினாலும் அந்தக் குரலில் மெலிதாகக் களைப்பும், அயர்ச்சியும் இழையோடிற்று. ஆனாலும் விடாமல் கேட்டான் சாயிராம்.

''பின் எதைக் கடமைன்னு சொல் றீங்க...?''

''அப்பா, அம்மாவிற்கு உதவி செய்ய றதை. வயசான காலத்தில் அவங்களைக் காப்பாத்தறதை...''

''இதோ பாருங்க... இப்படியெல்லாம் பேசி என் மனத்தை மாத்திடலாம்னு நினைக் காதீங்க. எங்கே இருந்தாலும் அம்மா அப்பாவைக் காப்பாத்த முடியும். உங்ககூட இருந்துக்கிட்டே வேலை செய்து அவங்க ளுக்குப் பணம் அனுப்ப முடியும். அதனால் அதைக் காரணம் சொல்லி என்னைத் தள் ளிடப் பார்க்காதீங்க. அப்பா, அம்மாவைக் காப்பாத்தறது எல்லோரும் செய்யறது. ஆனால், இப்படி ஒரு நல்ல நட்புக்காக, அதுவும் ஒரு ஆண் – ஒரு சிநேகிதிக்காகச் செய்யறதுதான் பெரிசு. அதுதான் வித்தி யாசமானது. என்னை வித்தியாசமாச் செய்ய விடுங்க... ப்ளீஸ்... விட்டுட்டுப் போயிடா தீங்க...''

அவனது கெஞ்சல் அவளை யோசிக்க வைத்தது. 'இப்போது என்ன சொன்னாலும் இவன் கேட்க மாட்டான். ஏற்கெனவே எதற்கும் உணர்ச்சிவசப்படுபவன். இப்போது இவனது எண்ணத்திற்கு மாறாக எது செய் தாலும் உடைந்து போவான். அதைவிடக் கூட அழைத்துப் போய்ச் சில நாட்களுக்குப் பின் பக்குவமாகச் சொல்லி அவனது அம்மா அப்பாவிடம் அனுப்பி வைப்பது தான் சரி' என்கிற முடிவிற்கு வந்தாள் இருத்திகா. அந்த முடிவைச் செயலாற்றுகிற நோக்கத்தில் மீண்டும் பாஸ்கரப்பாவைப் பார்த்தாள்.

''என் கூட சாயிராம் வர்றதால் உங்க ளுக்கு எந்த இடைஞ்சலும் இல்லை யேப்பா...?'' என்று கேட்டாள்.

''என்னம்மா இப்படிக் கேட்கறே...?'' என்று வருத்தப்பட்டார் அவர்.

''எனக்கு என்னம்மா இடைஞ்சல்... ஆனால்—''

''ஆனால் என்னப்பா...?''

''நீ அவசரப்படறியோன்னு தோணறது இருத்திகா. இன்னும் யோசிச்சு நடந்துக்க லாம்னு நினைக்கிறேன்...''

''எதைப் பத்தி...?''

''உன் எதிர்காலம் பத்தித்தாம்மா...''

''அதுதான் பஞ்சாபின் பொற்கோவிலுக் குள்ளேயே முடிஞ்சு போயிடுத்தே...''

''அப்படி முடியக் கூடாதுன்னு நான் நினைக்கிறேன்—''

''நான் நினைக்கலேயேப்பா. நெருப்பு மாதிரி வாழ்ந்து, எரிந்து, இப்போ சாம்ப

மாவிளக்கு எல்லோரும் அறிந்த ஒன்று. ஆனால் சோற்று விளக்கும் இடுகிறார்கள் கோவை மாவட்டத்தில். திருமண வீடுகளில் மணவறை முன்பாக மரஉரல் ஒன்றைக் கவிழ்த்துவைத்து. அதன் மீது அகன்ற மண் பாத்திரம் ஒன்றை வைத்து, பாதி அளவு சோற்றை அமுக்கி வைத்து. அதன் மீது எண்ணெய் ஊற்றி, பெரிய திரி யாகப் போட்டு விளக்கு எரிக்கிறார்கள்!

தகவல்: கே. உமா.



லானதற்கப்புறம் சாம்பலை மறுபடியும் எரிக்கணும்னு சொல்றீங்களே — எரியுமாப்பா...?''

''அ...ம்...மா!'' என்று அவள் கைகளைப் பற்றி இறுக அழுத்தினார் பாஸ்கரப்பா. சற்று முன் அவள் மீது ஏற்பட்ட கழிவிரக்கம் போய்ப் பெருமையாக உணர்ந்தார். மரியாதையாகப் பார்த்தார். ''சரிம்மா... நான் டில்லி போய் விட்டு வந்து விடுறேன். அப்புறம் நாம் எல்லோரும் கிளம்பி கூர்க் போகலாம் என்ன...?''

வெஸ்ட்கோஸ்ட் எக்ஸ்பிரஸில் கூட்டம் நெரிசல் பட்டது. முதல் வகுப்புப் பெட்டியின் ஜன்னல் ஓரம் உட்கார்ந்திருந்த கிருத்திகா கீழ பிளாட்பாரத்தில் நின்று கொண்டிருந்த அம்மாவையும், அனந்தசாமியையும் பார்த்தாள். இதே மாதிரி ஒரு வருடத்திற்கு முன் அம்மா தன்னைத் தமிழ்நாடு எக்ஸ்பிரஸில் ஏற்றி டில்லிக்கு அனுப்பியது ஞாபகத்திற்கு வந்தது. படிப்பைத் தவிர வேறெதுவும் தெரியாத குழந்தையாகத்தான் கிளம்பியது. எதிர் வீட்டில் அர்ஜுன் உட்கார்ந்திருந்தது...

'அர்ஜுன், அர்ஜுன், அர்ஜுன்...'

அவள் சட்டென்று கீழ் உதட்டைக் கடித்துத் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டாள்.

'கூடாது. இப்போது அழக் கூடாது. கண்ணோரத்தில் துருத்திக் கொண்டு நிற்கிற அழுகையை உள்ளே தள்ளணும். இத்தனை நாட்களாக அடக்கிக் கட்டுப்படுத்தி வந்ததை இப்போது போட்டு உடைத்துவிடக் கூடாது. திடமானவர்கள் அழ மாட்டார்கள். தீர்க்கமானவர்கள் அழமாட்டார்கள். கம்பீரமானவர்கள் அழ மாட்டார்கள்...

சட்டென்று தன்னைச் சமாளித்துக் கொண்டு அம்மாவைப் பார்த்துப் புன்னகை செய்தாள்.

''வரேம்மா. ஜாக்கிரதையாக இரும்மா. விஷ்ணு பிரசாத் கிட்டேயே போய்ச் சேர்ந்து விடு. இங்கே தனியாக இருக்க வேணும். என்ன...?''

புடவைத் தலைப்பால் கண்களைத் துடைத்துக் கொண்ட புவனேஸ்வரி, நிமிர்ந்து அவளைப் பார்க்கிற சக்தியற்றுத் தலையாட்டினாள். கிருத்திகாவின் பார்வை அம்மாவை விட்டுப் பக்கத்தில் நின்று கொண்டிருந்த நாகம்மாவிடம் போயிற்று.

''வரட்டுமா நாகம்... நீயும் அம்மா கூடவே போய் இரு... நட்புக்கு இலக்கணம் அதுதான். இதோ சாயிராமைப் பார்க்கறியே... அவர்தான் அதுக்கு உசந்த உதாரணம்...''

சொல்லிவிட்டு அனந்தசாமியைப்பார்த்த போது மனம் இன்னமும் தெளிவடைந்த மாதிரி தோன்றியது. அந்த முலாம்பழ முகத்தின் சாந்தியும், நிம்மதியும் உள்ளுக்குள் வந்து ஒட்டிக் கொண்டாற்போலிருக்க அவள் இயல்பாகப் புன்னகைத்தாள்.

''என்ன மாமா வரட்டுமா...?''

''போயிட்டு வாம்மா...'' என்று சிரித்தார் அவர். ''மங்களூர் ஸ்டேஷனுக்கு



ஆங்கில எழுத்துக்களில் '0'விற்கு தனிச்சிறப்பு உண்டு. தோன்றிய காலந் தொட்டு உருவ அமைப்பில் மாறுதல் அடையாதிருக்கும் ஒரே ஆங்கில எழுத்து அதுதான். —ஷம்மி.

பாஸ்கரப்பாவும், ராம்சிங்கும் வந்து அழைத்துப் போவார்கள். ஜாக்கிரதையாசப் போயிட்டு வா. என்னிக்கு இந்த மெட்ரூஸ் வாசம் சலித்து, பந்தம் விட்டுப் போறதோ அன்னிக்கு நானும் உங்களோட கூர்க் வந்து சேர்ந்துடுவேன்...''

''வாங்க மாமா...'' என்கிற அவளது பதிலின் கூடவே முதல் மணியடித்தது. பத்திரிகைகள் வாங்கப் போன சாயிராம் அவசர அவசரமாக ஓடிவந்து பெட்டியில் ஏறி அனந்தசாமியைப் பார்த்தான்.

''வரேன் சாமி...''

''வாப்பா... அங்க போனாலும் கவிதை எழுதறதை விட்டுடாதே...''

''விடமாட்டேன். இனி என் இலக்கு சினிமா இல்லை சாமி. பத்திரிகைகள்தான்.''

இரண்டாம் மணியடித்து, பச்சைவிளக்கு எரிந்து சட்டென்று ரயில் நகரத் தொடங்கிற்று. பெட்டியைப் பிடித்துக் கொண்டு கூடவே நகர்ந்து வந்த புவனேஸ்வரி கலங்கிய கண்களோடு கிருத்திகாவை ஏறிட்டுப் பார்த்துச் சொன்னாள்.

''என்னை மறந்துடாதே கீர்த்தி...?''

''சீ! என்னம்மா பைத்தியக்காரத்தனம். உன்னை எப்படி மறக்க முடியும்? நீ நின்னுக்கோம்மா. ரயில் வேகம் பிடிக்கிறது...''

அதற்குமேல் ஓட இயலாமல் புவனேஸ்வரி நின்று கொள்ள ரயில் வெகு சுலபமாக அவளைக் கடந்து போயிற்று. அம்மாவின் தலை தூரத்துப் புள்ளியாய் மறைந்து விலகுகிற வரை கையாட்டிய கிருத்திகா, பின் ஒரு ஆழமான பெருமூச்சோடு தன் இருக்கையில் சரிந்து வசதியாக உட்கார்ந்து கொண்டாள். எதிரிலிருந்த சாயிராமைத் தோழமைப் புன்சிரிப்புடன் பார்த்து விட்டுக் கையில் இருந்த பத்திரிகையைப் பிரித்து வைத்துக் கொண்டு எந்தச் சலனமும் இல்லாதவளாக அதில் மூழ்கிப் போக, அவளை ஒரு ஆச்சரியத்துடனும், மதிப்பு, மரியாதையாகவும் பார்த்துக் கொண்டே வந்தான் சாயிராம்.

**(முற்றும்)**



# பிச்சைக்காரர்கள் ஓர் ஆராய்ச்சி

○ பண்டோபாத்யாயா

பண்டோபாத்யாயா... கல்கத்தாவில் ஒரு அரசினர் அலுவலகத்தில் கிளார்க்காக வேலை செய்கிறார். இவருடைய தலைமையில் ஒரு சங்கம் கடந்த 14 வருஷங்களாக ஒரு ஆராய்ச்சி நடத்துகிறது. கல்கத்தாவிலுள்ள பிச்சைக்காரர்களைப் பற்றிய ஆராய்ச்சி! 30000 பிச்சைக்காரர்கள் பற்றிய விவரங்கள் இவர்களிடம் இருக்கிறது. எழுபது சதவீதம் பிச்சைக்காரர்கள் தொழிற்சாலைகள், மில்கள் இவற்றிலிருந்து வேலை நீக்கம் செய்யப்பட்டவர்கள். (கல்கத்தாவில் பிச்சையெடுப்பவர்கள் வெளியூர்களிலிருந்து வந்தவர்கள்' என்ற எண்ணத்தைத் தவறாக்குகிறது இந்தச் செய்தி!)

பலர் நம்புவது போல் பெரும்பாலான பிச்சைக்காரர்கள் பிளாட்பாரத்தில் தூங்குவதில்லை. நகரத்திலுள்ள பல சேரிகளில் வாடகை கொடுத்துக் கொண்டு சிறு வீட்டில் குடியிருக்கிறார்கள். கிருஷ்ண பிரதன் என்பவர் முன்பு ரயில்வே ஊழியர். இப்போது ஒரு விபத்தில் இரண்டு கைகளையும் இழந்துவிட்டுக் கல்கத்தாவில் பிச்சையெடுத்துக் கொண்டிருக்கிறார். இந்த சம்பாதனையில் அவர் தம் இரண்டு பெண்களுக்குக் கல்யாணம் பண்ணி விட்டார். கல்கத்தாவில் மாதம் 1500 முதல் 1800 ரூபாய் வரை சம்பாதிக்கும் இருபது பிச்சைக்காரர்கள் இருக்கிறார்கள்! 'பாரேத் பண்டிட்' என்ற பிச்சைக்காரரிடம் அவர் சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்ட வீரர் என்பதற்கு சர்ட்டிபிகேட்டுகள் இருக்கின்றன. எவ்வளவோ முயன்றும் அவருக்கு அரசினரிடமிருந்து பென்ஷன் கிடைக்கவில்லை.

பல பிச்சைக்காரர்களின் பையன்கள் பிச்சையெடுப்பதில்லை. ரிக்ஷா இழுக்கிறார்கள் அல்லது திருடுகிறார்கள். அவர்களுடைய பெண்கள் சிகப்பு விளக்கு பகுதிக்குப் போய் விடுகிறார்கள்.

பொதுவாக எல்லாப் பிச்சைகாரர்களும் 'பிச்சையெடுப்பதும் ஒரு தொழில்தான்'' என்று சொல்கிறார்கள்!

பல பிச்சைக்காரர்களுக்கு அரசியல் தெரியும்! 49 சதவீதம் பேர் (இ) காங்கிரஸ் அனுதாபிகள்! 24 சதவீதம் (வ) கம்யூனிஸ்ட் கட்சி ஆதரவாளர்கள்; 13 சதவீதம் இடதுசாரி கம்யூனிஸ்ட் கட்சி அபிமானிகள்; 5 சதவீதம் ஜனதாக் கட்சி ஆதரவாளர்கள்!

—அனிதா ராமச்சந்திரன்

---

''என்கிட்டே பணமிருக்குங்கறதுக்காகத்தானே நீங்க என்னைக் கல்யாணம் செய்துக்கிட்டீங்க?''

''சத்தியமா அதுக்காக இல்லே.''

''பின்னே எதுக்காகவாம்?''

''என்கிட்டே பணமில்லேங்கறதுக்காக!''






நீண்ட கவிதை ஒரு கொட்டாவியில் முடிகிறது.

—அமெரிக்கப் பழமொழி.
எஸ். முகம்மது யூசுப்.

# நேரம் நல்ல நேரம்



**70. டைரக்டர்கள் பாலசந்தர், பாரதிராஜா, பாலு மகேந்திரா, பாக்கியராஜ் ஆகியோரிடையே ஒற்றுமை வேற்றுமைகளைப் பற்றிச் சொல்லுகிறார் திரு. கமல்.**

தரமான முறையில் வெற்றியை அடைய வேண்டும் என்ற ஆர்வம் கொண்டவர்கள். பாக்கியராஜ் என்று சொன்னவுடனே முருங்கைக்காய் சமாசாரத்தைப் பற்றிச் சொல்லுவீர்கள். அதுபோக, மற்ற தரமான விஷயங்களையும் அவர் சொல்லியிருக்கிறார். தமிழ்த் திரையுலகில் நிராகரிக்கப்பட்ட ஒரு காரக்டரை அவர் கதாநாயகனாக வைத்திருக்கிறார். சர்வர் சுந்தரத்தில் அதையே செய்திருக்கிறார் திரு. பாலசந்தர் அவர்கள். சாதாரணனைக் கதாநாயகன் ஆக்கிவிட்ட பெருமை இவர்களுக்கு உண்டு. நால்வருமே கடுமையான உழைப்பாளிகள்; கடுமையான தன்னம்பிக்கை உள்ளவர்கள். 'இதைத்தான் செய்வேன் — இப்படித்தான் செய்வேன்' என்று தங்களை உருவகப்படுத்திக் கொண்டு, வெற்றியையும் அடைந்து காட்டியவர்கள் அவர்கள்.

வேற்றுமைகள் என்னவென்றால், பாலசந்தர், பாரதிராஜா இருவருமே சத்தமாக, அழுத்தமாக, தங்களுடைய கொள்கைகளைச் சொல்லுபவர்கள். இதில் சற்றே மாறுபட்டவர் பாலுமகேந்திரா: மிருதுவாகச் சொல்லுவார். அதையும் விட மிருதுவாக உளறுவது போல் — நகைச்சுவையாக ஆனால் உண்மையை நுழைத்து நுழைத்துச் சொல்லுவார் பாக்கியராஜ். இது வேற்றுமை. மற்ற மூவருக்கும் மூத்தவர் பாலசந்தர்; முன்னோடி பாலசந்தர். இது அவருக்கும் மற்றவர்களுக்கும் உள்ள வேற்றுமை.

**71. திரு. கண்ணன், அம்பத்தூர்.**
**லா. ச ராமாமிருதம் கதைகளைப் படித்திருக்கிறீர்களா?**

ஒருபுறம் பார்க்கும்போது ராமாமிருதம் அவர்களின் எழுத்து ஒரு சூழ்ச்சி போல் தோன்றும். வார்த்தைகளால் சிலந்தி வலை போன்று பின்னி, அதில் ரசிகர்களைப் பூச்சிப் பிடிப்பது போல் பிடித்து அமுக்கி, அமுத்தி விடுகிறவர் அவர். இன்னொருபக்கம் பார்க்கும்போது மெல்லிய காற்று போன்று தோன்றும். அது நம் மீது படும்போது குளிரும் சில சமயம். சில சமயம் வியர்வையைப் போக்கிவிடும். சில சமயம் முதுகெலும்பில் பட்டு நமக்குச் சிலிர்ப்பை ஏற்படுத்தி எதையாவது போர்த்திக் கொள்ள வேண்டும் என்கிற உணர்வை உண்டாக்கும். நம் அம்மணத்தை ஞாபகப்படுத்தும் அவருடைய எழுத்துக் காற்று... இப்படிச் சொல்லிக் கொண்டே போகலாம்.

அவருடைய எழுத்தைக் கொஞ்சம் அநாயாசமாக, மல்லாந்து படுத்துக் கொண்டு படிக்க முடியாது. திடீரென்று எழுந்து உட்கார்ந்து கொஞ்சம் புருவத்தைச்சுருக்கி, 'என்ன?' என்று யோசித்துப் படிக்காவிட்டால், மேலெழுந்தவாரியாகப் படித்த ஒரு குற்றச்சாட்டு, அவற்றைப் படிப்பவனை வந்து சேரும்.

**72. என். வித்யா, ஏரல்.**

**திரையுலக நடிக, நடிகையர் பொதுச் சொத்துக்களாக மதிக்கப்படுகின்றார்கள். ஆகவே அவர்களின் நிறைகளும், குறைகளும் மக்களால் விமர்சிக்கப்படுகின்றன. இதைச் சிலர் தவறாகப் புரிந்து கொண்டு, தங்கள் சொந்த வாழ்க்கையை இவர்கள் ஏன் விமர்சிக்க வேண்டும் என்று நினைக்கிறார்கள். இதைப்பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?**

'சிலர் தவறாகப் புரிந்து கொண்டு' என்று சொல்லும்பொழுது, என்னைக் கடுமையாகக் கண்டிக்க வேண்டாம் என்பதற்காகச் சொல்லுவது போல் தோன்றுகிறது. இதை அதிகமாக விமர்சித்தவன் நான் தான். நடிகன் மட்டுமல்ல, எந்த ஒரு தனி நபருடைய வாழ்க்கையையும் தவறாகப்

## கமல் பதில்கள்



போகுமேயானால், மற்றவர்கள் கண்ணோட்டத்தில் தவருகத் தென்படுமேயானால், அதை விமர்சிக்க உரிமை இருக்கிறதோ இல்லையோ — விமர்சிக்கிருர்கள். இப்படித்தான் சொசைடியில் சில சந்புக்காரர்களும் வேசிகளும் உருவாக்கப்படுகிருர்கள். அதாவது இவர்களுடைய விமர்சனத்திஞல். இவர்களுடைய விமர்சனத்தை நான் தடுக்க முடியாது. ஆனுல் அதை நான் ஏற்றுக் கொள்வதும் ஏற்றுக் கொள்ளாததும் என் இஷ்டம். விமர்சிப்பது ஒன்று மட்டுமே அவர்களின் உரிமை.

நான் எப்படி வாழ்வது என்பதை அவர்கள் வரையறுத்துச் சொல்ல முடியாது. அதைச் சொல்லாதீர்கள் என்பதுதான் என்னுடைய பல பேட்டிகளில் வரும் அழுத்தமான கண்டனம். நான் இப்படித்தான் இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்காதீர்கள். அதற்குக் காரணம் நான் கொலைகாரனுகக் கூட இருப்பேன் என்று அர்த்தமல்ல. இப்படித்தான் வாழ வேண்டும். இப்படித்தான் ஒரு நடிகன் இருக்கவேண்டும்... அவனுக்குக் கோபம் வரக் கூடாது... அவன் ஆத்திரப்படக் கூடாது... அவன் அப்படி இருக்க வேண்டும், இப்படி இருக்கவேண்டும்... அவனுக்குக் காதல் கூடாது, கவிதை கூடாது என்று நீங்கள் வரையறுக்காதீர்கள். அதெல்லாம் இந்தப் பறவைக்கே உரித்தான சுதந்திரம். உங்களின் வேடந்தாங்கலில் வந்து அமருவோம். எங்களைப் பிடிக்க முற்பட்டால் சிறகைச் சிலுப்பிக் கொண்டு பறந்துவிடுவோம்!

**73. பி. செல்வ சுப்பிரமணியன், நாகர்கோவில். நடிப்பில் மொத்தம் பதிமூன்று வகைகள் இருப்பதாக உங்கள் பேட்டியில் படித்தேன். அவைகள் யாவை? விளக்க முடியுமா?**

ஐயையோ... அப்படியெல்லாம் நான் சொல்லவே இல்லை ஸார்! பதிமூன்று வகைகள் என்று சொன்னேன்? ஏற்கெனவே இருக்கிற நவரசம் கொடுக்கிற தொல்லை போதாது என்று இன்னும் நாலு வேறு! எதற்கு இது? அப்படியெல்லாம் நான் சொல்லவில்லை. நான் சொல்லியிருப்பதைத் தவருக ஒருவேளை மொழி பெயர்த்திருப்பார்கள் ஆங்கிலப் பத்திரிகையிலிருந்து; அல்லது நீங்கள் ஒருவேளை அதைத் தவருகப் படித்து விட்டீர்களா என்று தெரியவில்லை... நான் சொன்னது: ''நடிகனுக்கு ஒரு பத்தோ, பதினைந்தோ முகங்கள்தான். அதைத்தான் அவன் திரும்பத் திரும்ப முகமூடிகளை மாற்றுவது மாதிரி செய்ய வேண்டும்.

**74. திரு. கி. திருஞானம், சுவாமிமலை. தங்களின் சிந்தை கவர்ந்த மகாகவியின் பாடல் எது?**

அக்கினிக் குஞ்சொன்று கண்டேன் —அதை
அங்கொரு காட்டிலோர் பொந்திடை
வைத்தேன்:

வெந்து தணிந்தது காடு — தழல்
வீரத்தில் குஞ்சென்றும் மூப்பென்றும்
உண்டோ?

தத்தரிகிட தத்தரிகிட தித்தோம்...

என்று ஒரு தாளத்துடன் பாடியிருக்கும் அந்தக் கவிஞனைப் பார்க்கிறேன். எப்படிச் செய்திருப்பார்? ஒரு சிறிய தீக்குச்சியைக் கொளுத்திக் காட்டில் போட்டுவிட்டு, அது எரிவதைப் பார்த்து ரசிக்கும் ஒரு எக்ஸெண்ட்ரிக் கவிஞனுகக்கூட இருந்திருக்கலாம். இப்படி எல்லாம் நான் கற்பனை செய்து பார்ப்பேன். 'சின்ன நெருப்புக்குச்சிதானே நான் போட்டேன். காடே எரிஞ்சு போச்சே! என்று குழந்தைத்தனமாக, குறும்புத்தனமாக ஏற்பட்ட பாடலாகக் கூட இருக்கலாம். அல்லது ஒரு பெரிய சித்தாந்தத்தை மனத்தில் வைத்துக் கொண்டு அதை எளிமையாகச் சொன்ன பாடலாகக் கூட இருக்கலாம். இந்த எளிமை எனக்குப் பிடித்தது.

தொகுப்பு: சித்தார்த்



# பொருத்தம்

மௌனியின் தாய் வீடு நாடக மேடை தான். வளர்ந்தவுடன் நன்றி மறக்கத் தயாராயில்லை அவர். எனவே பாத்திர அறிமுகங்கள் கிருஷ்ண கான சபா மேடையில் விளக்கை அணைத்துப்போட்டு, அணைத்துப் போடுகிற மாதிரி ஆரம்பம். எக்கச்சக்கமான அளவில் ஏகப்பட்ட கதாபாத்திரங்கள்! ஆனால் கடைசிவரை குழப்பமில்லாமல் அத்தனை பேரையும் சமாளித்திருக்கும் மௌனியைத் தனியே கூப்பிட்டுக் கை கொடுக்க வேண்டும்.

கொழுகொழுவென்ற கறுப்பு உடம்பு. அதில் எப்போதும் ஒரு விறைப்பு. 'பன்னிக்குப் பொறந்த நாயே' என்று ஒரு குரைப்பு. தனக்குப் பிரியமில்லாதது நடந்தால் உடனே தூணையோ, சுவரையோ தேடிக் கொண்டு போய் முட்டு முட்டு என்று முட்டி அதிரச் செய்வது — வினுசக்கரவர்த்தி ஜமாய்க்கிறார். பெண் பார்க்கப் போகும் இடத்தில் அவர் மூடு மாறினால் என்ன ஆவது என்று கையோடு சிமெண்டு கலவையை எடுத்துப் போய், அவர் மோதி விரிசல் விட்ட சுவரை மராமத்து செய்யும் காட்சி அமர்க்களம்.

மரமோ, மனிதனோ அகப்பட்டால் நிறுத்திப் பிடித்து தான் பார்த்த சினிமாக் கதையை விலாவாரியாய்ப் பெயர் காட்டுவதிலிருந்து ஆரம்பிக்கும் மனோரமா தனி முத்திரை. குதிரை வண்டிக்காரனிடம் அவள் கதை சொல்வதும், கடைசியில் ஆட்டோவில் அவனை ஆஸ்பத்திரிக்கு அள்ளிப் போகும் காட்சியும் கலகலகலகல.

சாரங்கன் என்றால் சாராயம், விஸ்வநாதன் என்றால் விஸ்கி, வெளிநாட்டுத்துரை என்றால் சீமைச் சரக்கு என்று அகராதி ஒய். ஜி. மகேந்திரனுக்கு. 'சாரங்கனோட பேசணும்பா', 'விஸ்வநாதனோட பேசிட்டு வந்தேன்ப்பா' என்று அவர் திரையில் தோன்றும் போதெல்லாம் வயிறு வெடிக்கிறது.

அரை வழுக்கையும், முரட்டுத் தாடியுமாய் ஆங்கிலேய மானேஜர் ஸ்பெஷல் சிருஷ்டி. கோபம் குமுறினால் 'பஹ், பஹ' என்று சிரிப்பார். சந்தோஷம் பொங்கினால் நெருப்புக்கண்ணால் முறைப்பார். ஒய். ஜி. எம். + மானேஜர் தோன்றும் காட்சிகள் சிரிப்பு மத்தாப்புக்கள்.

இப்படி நாலாபக்கமும் தோரணங்கள் கட்டி, சந்தோஷத் தூறல்கள் தூவிக் கொண்டே, நூலிழை தடிமனுக்கு ஒரு காதல் கதையையும் கோர்த்துக் கொண்டு, மௌனி தொய்வில்லாமல் காட்சிகளை மாற்றிக் கொண்டே போகிறார். ஆனால் அவரைப் பார்க்கும்போது மட்டும் சிரிப்பே வரவில்லை. திரைக்குப் பின்னால் இருப்பதே இன்னும் சிறப்போ?

நாயகன் நரேஷ்குமார் எத்தனை லிட்டர் வழிய வேண்டுமோ, அதற்கு ஒரு லிட்டர் மேலேயே வழிகிறார். பஸ்ஸில் வழி அனுப்ப வரும் அப்பா, அண்ணன், அண்ணி ஆளுக்கொரு பக்கம் அவரைத் தர்மசங்கடத்தில் தேய்த்து விட்டுப் போக, பின் சீட்டில் வந்து உட்காரும் பூர்ணிமா (ராவ்) 'தேவாங்கு சார்' 'தேவாங்கு சார்' என்று கூப்பிட்டு அவரைத் திருகுவதில் ஆரம்பித்துப் பூர்ணிமாவின் துடுக்கும், நரேஷ்குமாரின் அசட்டுத்தனமும் வெகு அழகாக இழைந்து வருகின்றன.

க்ளைமாக்ஸ் என்று ஒன்று வேண்டும் என்பதற்காக ரீட்டாவும், டேவிட்டும் நுழைகிறார்கள். உயிரில்லாமல் வந்து போகிறார்கள். க்ளைமாக்ஸ் அசட்டுக் கூத்து.

சிரிசிரி என்று சிரித்துவிட்டு வெளியே வந்து மறுநாள் பிரச்னைகளைப் பற்றிச் சிந்திக்கத் தயாரா, நீங்கள்?

பொருத்தம் உங்களுக்குப் பொருந்தும்.

**வெள்ளித்திரை**

கதை, வசனம், டைரக்‌ஷன் ஆர். பாண்டியராஜன். இதில் விசேஷம் இல்லை. அவர் பாக்யராஜ் உதவியாளராய் இருந்து, இன்றைக்குத் தனியாய் ஒரு படம் செய்கிறார் என்பது தான் விசேஷம்.

அடா, அடா, அடா – குருவிற்கேற்ற சிஷ்யன்.

கோயிலை அப்பிரதட்சிணமாய்ச் சுற்றும் ஆசாமி; லவ் அப்ளிகேஷனுடன் நாயகன்; லாட்டரிச் சீட்டுப் படையல் என்று சின்னச் சின்னக் காட்சிகளாய்க் கோத்திருப்பதிலிருந்து அப்படியே பாக்யராஜ்தான்!

ஆரம்பிக்கும் போது என்னவோ அகவாரசியமாய்த்தான் இருக்கிறது கதை. ஒரு வீடு, அவனைச் சுற்றி ஒரு பட்டாளம், 'சோறுன்னு சட்டிஇம்போம்' பாட்டு என்று பல படங்களைப் போல ஆரம்பித்து, ஒரு அனுவசியச் சண்டையைத் தொட்டு அப்புறம் அத்தைமகள், தனலட்சுமியை அறிமுகப்படுத்துகிற வரை அரைத்த மாவுதான்.

அப்புறம்தான் அமர்க்களமான பாட்டு வாத்தியார், துடுக்கான தனலட்சுமி, கண்ணாடி மாமா என்று ஜமாய்த்திருக்கிறார்கள். செவ்வாய் தோஷம், கல்யாண கலாட்டா என்று சம்பவங்கள் ஜிலுஜிலு.

பாண்டியராஜன் வசனம் கூட அப்படியே குருவைப் போலத்தான்:

''மொதல்ல சும்மாத்தான் அடிச்சான், எம். எல். ஏ. மகன்னு தெரிஞ்சப்புறம்தான் குறுக்கால அடிச்சான்!''

பிரபு அத்தை வீட்டில் சாப்பாட்டு இலை முன் உட்கார்வதும், பக்கத்தில் மாமா கவுண்டமணி இரை கிடைக்காத கழுகாய்ப் பார்ப்பதும், பிரபு இலையில் சாதத்தில், மறைந்த முட்டைகள் தலையை நீட்டுவதும், 'அடியே கோழிப்பண்ணையே இருக்கேடி' என்று கவுண்டமணி பொருமுவதும், சிரித்து சிரித்து, சிரித்து, சிரித்து—...

ஒரு குறள் சொல்லும்படி சேட்க, பிரபு ஒரு குரல் கொடுக்க, 'வள்ளுவருக்கு மிமிக்ரி தெரியும்னு உன்னாலதான் தெரிஞ்சிக்கிட்டேன்' என்பது போன்ற ஏகப்பட்ட கலகலப்பு வெடிகள்.

பிரபு பல ஆண்டுகளுக்குப் பின்னரும் இந்தப் படத்தால் பெயர் சொல்லப்போகிறார்.

ரேவதி எப்போதும் போல் நன்றாக நடித்திருக்கிறார்.

கவுண்டமணியின் கால்ஷீட் பாதிப் படத்திற்கு மேல் கிடைக்கவில்லையோ என்னவோ பாதிபடம் வரை கலகலப்பாக்கிய அந்த காரெக்டர் திடீரென்று அம்பேல்!

இளையராஜாவின் இசை படத்துடன் இசைந்து வந்திருப்பதால் படம் ஓஹோ என்றால் இசை ஓஹோஹோ!

சடையில் டைரக்டர் அந்தச் சறுக்கல் மட்டும் செய்திருக்காவிட்டால் படம் நூறு நாள்தான்.

இப்போது?

ரசிகர்கள் அந்தச் சறுக்கலை மன்னிக்க வேண்டும்.

-ஜெயமன்மதன்





# பணவீக்கத்தில் பஞ்சாங்கம் பட்டபாடு



லண்டன் நகரம்

## 19

நம்மூர் விமான நிலையங்களைப் போல் பயணம் தொடங்க ஒரு மணி நேரத்திற்கு முன்புதான் 'கவுண்ட்டரைத் திறந்து' 'போர்டிங் பாஸ்' தர ஆரம்பிப்பது என்ற வழக்கம் ஐரோப்பாவில் இல்லை. பலமணி நேரங்களுக்கு முன்பே கூட 'லக்கேஜ்'களை 'புக்' செய்துவிட்டுப் போர்டிங் பாஸைக் கையில் வாங்கி வைத்துக் கொள்ளலாம். ஆம்ஸ்டர்டாம் விமான நிலையத்திற்கு மிகவும் முன்னதாகவே வந்திருந்த நான் லண்டனுக்கு போர்டிங் பாஸை வாங்கிக் கொண்டு, கீழே இருந்த பாதாள ரயில் நிலையத்திற்குப் போனேன். அங்கிருந்த ஒரு கடையில் இரண்டு பிக்சர் போஸ்ட் கார்டு வாங்கி உட்கார்ந்து எழுத ஆரம்பித்தேன். பக்கத்து இருக்கைகளில் ஒரு டச்சுக் குடும்பம் குழந்தை குட்டிகளோடு இருந்தது. போர்டிங் பாஸையும் பாஸ்போர்ட்டையும் பக்கத்தில் வைத்துக் கொண்டு — கார்டுகளை எழுதத் தொடங்கினேன். அந்த டச்சுக் குடும்பத்துக் குழந்தை ஓடிவந்து பாஸ்போர்ட்டிலிருந்து ஒரு போர்டிங் கார்டை உருவி விளையாட ஆரம்பித்தது. நைஸாக அந்தக் குழந்தையிடமிருந்து போர்டிங் கார்டை மீண்டும் வாங்கி பாஸ்போர்ட்டுக்குள் உரிய பக்கத்தில் சொருகினேன். மறுபடியும் குழந்தை ஓடிவந்து அதை எடுத்தது. ஒரு குழந்தையிடம் அதிகம் 'கடுமை'யைக் காட்ட இயலாமல் — முடியாமல் — நான் கடைசியாகப் போர்டிங் கார்டை எப்படியும் வாங்கி விடலாம் என்ற நம்பிக்கையில் வேலையைத் தொடர்ந்தேன். பத்து நிமிஷங்களில் பிக்சர் போஸ்ட் கார்டுகளை எழுதி — டைரியில் சரி பார்த்து அவற்றுக்குரிய முகவரிகளையும் எழுதி விட்டு நிமிர்ந்த போது அருகே அமர்ந்திருந்த டச்சுக் குடும்பத்தைக் காணவில்லை. என் பாஸ்போர்ட்டிலிருந்த 'போர்டிங் கார்டை'யும் காணவில்லை. பாஸ்போர்ட் மட்டும் இருந்தது. திணுக்குற்றேன். எனது போர்டிங் பாஸை அந்தக் குழந்தை எங்காவது கீழே போட்டிருக்குமோ என்று சுற்றுமுற்றும் தரையில் தேடினேன். அகப்படவில்லை. லண்டனுக்கான விமானத்தில் ஸீட் எண், ஃபிளைட் நம்பர் அந்த ஃபிளைட்டுக்காக நான் போக வேண்டிய கேட் எண், எல்லாமே போர்டிங் கார்டில்தான் இருந்தன. அவற்றைக் கூட விமான நிலைய போர்டில் பார்த்து மறுபடி தெரிந்து கொள்ளலாம். ஆனால் போர்டிங் பாஸ் இல்லாமல் விமானத்திற்குள் போக முடியாது. ஆபத்தில் மாட்டிக் கொண்ட உணர்வும், டென்ஷனும் வந்தன. அதிர்ஷ்டவசமாக என்னுடைய ஸீட் எண் நினைவிருந்தது. புக்கிங் கவுண்டரில் அந்த ஸீட் எண்ணைச் சொன்னால் வேறொரு போர்டிங் பாஸ் வாங்கிவிட முடியும் என்கிற நம்பிக்கையில் அங்கே ஓடினேன். நடந்ததைச் சொல்லி நான் புக் செய்த நேரம், பெயர் இருக்கை எண், முதலிய எல்லா விவரங்களையும் கூறியவுடன், அங்கிருந்த பெண்மணி

## நா. பார்த்தசாரதி

அந்த ஸீட் எண்ணுக்குரிய விவரங்களைக் 'கம்ப்யூட்டர் ஸ்கிரீனில்' வரவழைத்துப் பார்த்தாள். யெஸ் யூ ஆர் ஹண்ட்ரட் பர்ஸெண்ட் கரெக்ட்' என்று ஒப்புக் கொண்டு அவளுக்கு மேற்பட்டவளான வேறொரு பெண்மணியைக் கூப்பிட்டு நடந்ததைச் சொன்னாள். ஆனால் அந்த வேறொரு பெண்மணி, ''அக்கார்டிங் டு ரூல்ஸ் யூ ஹாவ் டு பை அனதர் டிக்கட் — நோ அதர் கோ'' — என்று நிர்த்தாட்சண்யமாகக் கையை விரித்து விட்டாள். வேறொரு டிக்கட் அந்த மாதிரி ஓர் அந்நிய நாட்டில் வாங்குவதென்றால் அதற்குப் பணம் 'ஹார்ட் கரன்ஸியில்' (ஸ்டெர்லிங் அல்லது டாலரில்) வேண்டும். எங்கே போவது? தவித்துப் போனேன். நல்லவேளையாக இரண்டு மூன்று நிமிஷத் தவிப்புக்குப் பின் விமான நிலைய என்கொயரி பகுதியிலிருந்து அசரீரி போல் ஒரு குரல் நிலையம் முழுவதும் கேட்கும்படி மைக்கில் ஒலிபரப்பியது:

''தவற விடப்பட்ட போர்டிங் பாஸ் ஒன்று இங்கே இருக்கிறது. உரியவர் உடன் வந்து பெற்றுச் செல்லவும்'' — கே. எல். எம். என்குயரி கவுண்டருக்கு ஓடினேன். கம்ப்யூட்டர் மூலம் அந்தப் போர்டிங் பாஸுக்கு உரியவரின் பெயர் முதலிய விவரங்களை அவர்கள் ஏற்கெனவே தெரிந்து வைத்திருந்தனர் போலும். சரியான நபரிடம் தான் கொடுக்கிறோமோ இல்லையோ என்று தெளிவு செய்து கொள்வதற்காக அவற்றை என்னிடமே விசாரித்துத் தெரிந்துகொண்டு, 'ஒரு டச்சுக் குடும்பம் அதைக் கொண்டு வந்து தங்களிடம் ஒப்படைத்ததாக'ச் சொல்லிக்கொடுத்தார்கள். சிறிது தொலைவு வந்ததும் குழந்தையின் கையில் போர்டிங் பாஸ் இருப்பதைக் கண்ட அந்தக் குடும்பத்தினர் என்குயரியில் அதைக் கொடுத்துவிட்டுப் போயிருக்க வேண்டும் என்று அநுமானம் செய்து கொண்டேன். எப்படியோ மலைபோல் வந்த ஆபத்துப் பனிபோல் நீங்கியது. நிம்மதியோடு லண்டன் ஃப்ளைட்டுக்கான கேட்டை நோக்கி நடந்தேன். இந்த நிகழ்ச்சி ஷிப்போல் விமான நிலையத்தையும் ஆம்ஸ்டர்டாமையும் நான் மறக்க முடியாதபடி செய்துவிட்டது. இதற்குப் பின் போர்டிங் பாஸ் விஷயத்தில் மிகமிக எச்சரிக்கை அடைந்தேன்.

ஆம்ஸ்டர்டாமுக்கும் லண்டனுக்கும் ஒரு மணி நேரம் கால வேறுபாடு. அதாவது லண்டனில் நான் பயணம் செய்த கே. எல். எம். விமானம் இறங்கிய போது என் கைக் கடிகாரத்தில் மணி 5.30; லண்டன் விமான நிலையக் கடிகாரத்தில் மணிஆறரை. ஏற்கெனவே டஸ்ஸில்டார்ஃபிலிருந்து சில லண்டன் நண்பர்களுக்குப் ஃபோன் செய்திருந்தேன். 1976—ல் நான் பார்த்த ஹீத்ரு கொஞ்சம் மாறுதலும், வளர்ச்சியும் பெற்றிருந்தது. முன்பெல்லாம் ஹீத்ருவிலிருந்து ஓரிடம் வரை பஸ்ஸில் போய் அப்புறம் தான் பாதாள ரயிலைப் பிடிக்க முடியும். இப்போது ஹீத்ருவுக்கே பாதாள ரயில் வந்திருந்தது. காமன்வெல்த் குடிமக்களுக்கு விமான நிலையத்திலேயே விஸா குத்திக் கொடுக்கிற முறை இருந்தது. விண்ணப்பத்தைக் கொடுத்து 6 மாதம்வரை லண்டனில் தங்கலாம் என்ற முத்திரையைப் பாஸ்போர்ட்டில் வாங்கிக் கொண்டேன். நண்பர் திரு சிவபாத சுந்தரத்தின் மகள் டாக்டர் மஞ்சுபாஷிணிக்கும் அவர் கணவர் சிவநாதனுக்கும் பாரதீய வித்யாபவனின் லண்டன் கிளை இயக்குநர் மத்தூர் கிருஷ்ணமூர்த்திக்கும் என் வரவு பற்றி அறிவித்திருந்தேன். தமக்கு 'பவனில்' வகுப்புகள் இருப்பதால் விமான நிலையம் வந்து அழைத்துச் செல்ல இயலுமா என்பது தெரியவில்லை என்று தெரிவித்திருந்தார் மத்தூர்ஜி. ஆனால் என்ன ஆச்சரியம்! 'பேக்கேஜ் கிளெய்ம்' பகுதியிலிருந்து டிராலியில் சாமான்களை வைத்து இயக்கியபடி நான் வெளியே வந்தால் மத்தூர்ஜி, சிவநாதன் இருவருமே முகம் மலர வரவேற்றார்கள். நான் சிவநாதனுடன் தங்குவதாகக் கூறியிருந்தேன். மத்தூர்ஜி பவனுக்கு அழைத்தார். மறுநாள் முதல் வேலையாகப் பவனுக்கு வருவதாகக் கூறி அவரிடமிருந்து விடைபெற்றேன்.

லண்டனிலிருந்து விலகி அமைதியாயிருந்த ஓர் அழகிய கிராமத்தில் சிவபாதசுந்தரத்தின் மகளும், அவர் கணவரும் வசித்து வந்தனர். வாட்டர்லூ பிரிட்டிஷ் ரயில்வே நிலையத்திலிருந்து சவுத்தாம்ப்டன் போகிற

○ லண்டன் மற்றொரு தோற்றம்



இரயிலில் ஏறினால் அரைமணி நேரப்பயணத்தில் 'வோக்கிங்' நிலையம் வந்துவிடும். அங்கிருந்து பத்து நிமிஷக் கார்ப் பயணம் அல்லது பதினைந்து நிமிஷ பஸ் பயணத் தொலைவில் இருந்தது 'ஒட்டர்ஷா' என்கிற அழகிய கிராமம். லண்டனில் பத்து நாட்கள் தங்கிவிட்டுப் பாரிஸ் போவது என் திட்டம். நண்பர்களையும், உறவினர்களையும் சந்திப்பது தவிர பி.பி.சி.யில் பேட்டி, லண்டன் தமிழ்ச் சங்கத்தினர் ஏற்பாடுசெய்திருந்த கூட்டத்தில் பேச்சு, ஈஸ்ட் ஹாம் கோவிலிலும் (தமிழர்கள் கட்டியிருப்பது) ஹைகேட் கோயிலிலும் (இதுவும் தமிழர்கள் கட்டியிருக்கும் மற்றொரு கோயில்) சொற்பொழிவுகள் என்று நிகழ்ச்சிகள்.

1976—ல் இருந்த இங்கிலாந்து 1984—ல் நிறைய மாறி இருந்தது. பதினெட்டு ரூபாய் மதிப்பிலிருந்து ஒரு பவுண்ட் ஸ்டெர்லிங் பதினாலே முக்காலுக்குத் தேய்ந்திருந்தது. ஃபாக்லாண்ட் போரும், பல்வேறு வகை வேலை நிறுத்தங்களும் இங்கிலாந்தின் பொருளாதார நிலையைப் பாதித்துப் பண வீக்கத்தை உண்டாக்கியிருந்தன. பல வாரங்களாக நீடித்துக் கொண்டிருந்த நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் போன்ற பல வேலை நிறுத்தங்கள் நாட்டைத் திணற அடித்துக் கொண்டிருந்தன. ஒருகாலத்தில் பிரிட்டிஷ் காலனிகளாக இருந்த பல்வேறு நாடுகளைச் சேர்ந்த மக்களின் தொகை இங்கிலாந்துக்குள் கணிசமாக ஊடுருவியிருந்தது. இது ஏராளமான வெள்ளையர்களை வேலையில்லாத் திண்டாட்டத்துக்கு ஆளாக்கிவிட்டிருந்தது. இதனால் இப்படி வெள்ளையரல்லாத மக்களின் ஊடுருவலை எதிர்க்கும் 'எனோக் பவல்' போன்றவர்களின் நிறவெறி இயக்கங்கள் தோன்றியிருந்தன. வெள்ளையரல்லாதாரை வெறுப்புடன் உறுத்துப் பார்க்கும் 'ஸ்கின் ஹெட்ஸ்' — தோன்றியிருந்தார்கள். பஞ்சாபில் பொற்கோவிலில் இராணுவம் தலையிட நேர்ந்தது பற்றி லண்டனில் ஒரு குட்டிப் பஞ்சாப்பாக விளங்கி வரும் சௌதாலில் பரபரப்பு உண்டாகி யிருந்தது. காலிஸ்தானுக்காக லண்டன் சௌதால் குருத்துவாராக்களில் மகாநாடுகள், வசூல்கள் எல்லாம் தாராளமாக நடந்தன.

இங்கிலாந்தில் பண வீக்கம் எந்த அளவு அதிகரித்துள்ளது என்பதை ஒரு சிறிய நிகழ்ச்சியின் மூலம் உங்களுக்குச் சொல்லிவிட முடியும். என் நண்பர் சி. ஸ்ரீநிவாஸன் (முன்னாள் மித்திரன் ஆசிரியர்) லண்டனுக்கருகே 'டீல்' பகுதியில் உள்ள தம் மகள் சித்ராவையும் அவர் கணவர் நாராயணசாமியையும் சந்தித்து வரச் சொல்லியிருந்தார். அவர்களுக்கு இந்துப் பண்டிகைகள், நாள், நட்சத்திரம், நல்ல நேரம், கெட்ட நேரம் தெரிவதற்காக ஒரு பஞ்சாங்கத்தை வாங்கிக் கொண்டு போகச் சொல்லி நான் வெளிநாடு புறப்படுமுன் மன்னார்குடியிலிருந்து எழுதியிருந்தார். ''மனோன்மணி விலாஸ் பஞ்சாங்கம் அல்லது பாம்புப் பஞ்சாங்கம்''- ஐம்பது காசுக்கு அந்தப் பஞ்சாங்கத்தை வாங்கிக் கொள்ள முடிந்திருந்தது. 'நீங்கள் லண்டனிலிருந்து 'டீல்' போக முடியாவிட்டால், அங்கிருந்தே தபாலில் அந்தப் பஞ்சாங்கத்தை அனுப்பிவிடலாம்' — என்று அவரே மாற்று யோசனையும் கூறியிருந்தார்.

நான் தபாலில் அனுப்ப ஆகிற செலவுக்கு நேரேயே போய்விடலாம் என்று நினைத்தேன். 1976—ல் இருந்த ரயில்வே கட்டண விகிதங்களை நினைத்து நண்பர் நாராயணசாமிக்கு ஃபோன் செய்து நான் பஞ்சாங்கத்துடன் டீல் வருவதாகச் சொன்னதும் அவர் மகிழ்ச்சியோடு இரண்டு நாள் லீவு போட்டுவிட்டு வீட்டில் இருப்பதாக ஒப்புக்கொண்டு விட்டார். நான் வோக்கிங்கிலிருந்து புறப்பட்டு வாட்டர்லூ — ஈஸ்ட் நிலையத்தில் இறங்கி ரயில் மாறி டீலுக்குப் புறப்பட்டேன். அதிகாலையிலேயே புறப்பட்டு விட்டேன். காலை ஒன்பது மணிக்குமேலே புறப்பட்டால் 'ஆஃப் பீக் அவர் கன்செஷன்' டிக்கெட் கிடைக்கும் — என்று நண்பர்கள் சுட்டிக் காட்டிய கட்டணச் சலுகை நேரத்தைக் கூடப் பொருட்படுத்தாமல் பஞ்சாங்கத்தோடு வைகறைப் பயணத்தைத் தொடங்கினேன். கையிலேயே பஞ்சாங்கம் இருந்தும் —என் போதாத வேளை டீலுக்குப் போய்த் திரும்ப 28 பவுண்ட் வரை எல்லாச் செலவுமாக ஆகிவிட்டது. அதைப் பதினைந்தால் பெருக்கிவிட்டு ரூபாயில் கணக்குப் பார்த்தால் ரூ. 420 ஆயிற்று. டெல்லிக்குச் சென்னையிலிருந்து இரண்டு தடவை போய்த் திரும்பலாம். டீல் லண்டனிலிருந்து செங்கல்பட்டு உள்ள தூரம் தான்.

''வெளிநாட்டுப் பயணம் முடிந்து ஊர் திரும்புகிற வரை எதையும் ரூபாயில் 'கன்வர்ட்' பண்ணி நினைக்காதீர்கள். 'பிளட் பிரஷர்' வந்துவிடும்'' — என்று வேடிக்கையாக எச்சரித்தார் ஒரு லண்டன் நண்பர். டீலிலிருந்து திரும்புமுன் நான் நாராயணசாமிக்காக வாங்கிச் சென்ற பாம்புப் பஞ்சாங்கத்தில் ராசிகளுக்கும் கிழமைகளுக்குமாக இணைத்துப் போட்டிருந்த பலனில் என் ராசிக்கு என்ன பலன் போட்டிருக்கிறது என்று பார்த்தேன். 'பணச் செலவு' — நண்பர் சந்திப்பு — என்று இருந்தது. சென்ற முறை லண்டன் போயிருந்த போது அங்கே ஒரு முருகன் கோயில் கட்ட நிதி வசூல் நடந்து கொண்டிருந்தது. முருகன் கோயில் கமிட்டியினர் அப்போது எனக்காக ஏற்பாடு செய்த ஒரு வரவேற்பு விருந்தில், ''தமிழ் நாட்டில் முருகப்பெருமானுக்கு அறுபடை வீடுகள் உள்ளன. ஏழாவது படைவீடு இங்கே லண்டனில் தான் தோன்றப் போகிறது'' — என்று பேசியிருந்தேன். அந்தப் பேச்சை அப்படியே எனக்கு நினைவுபடுத்தி, ''நீங்கள் அன்று கூறிய முருகனின் ஏழாவது படைவீடு ஈஸ்ட்ஹாமில் தோன்றி விட்டது! நீங்களும் மறுபடி வந்திருக்கிறீர்கள்! ஏழாவது படை வீட்டில் வந்து சொற்பொழிவாற்றுங்கள்'' — என்று கூப்பிட்டார்கள் ஈஸ்ட்ஹாம் சேகர், நாயுடு, முதலிய என் பழைய நண்பர்கள். ஆர்வத்தோடு ஈஸ்ட்ஹாம் முருகனைத் தரிசிக்கச் சென்றேன்.

(தொடரும்)

# இளமையும், வலிமையும்
# இருபதில் மட்டுமல்ல—அறுபதிலுமுண்டு!

பல்லாயிரம் ஆண்டுகள் இயற்கையின்
இன்ப இரகசியங்களைப் பகுத்துணர்ந்து
ஆராய்ந்த பண்டைய சித்தர்களின்

# காயகல்பம்



விஞ்ஞான முறையில் மீண்டும் தயாரிக்கப்படுகிறது.
தங்கபஸ்பம் அடங்கியது.

- மகிழ்ச்சியும், மனநிறைவும் வாழ்க்கையில் துள்ளி விளையாடத் துணை செய்கிறது!
- மனச் சோர்வு, உடல் தளர்ச்சிகளை நீக்கி உற்சாகம் ஊட்டுகிறது!
- கொழுப்பு சத்துக்களைக் குறைத்து, இருதயத்தை வலுப்படுத்துகிறது!
- சீரண இயக்கத்தைச் சீர்படுத்தி, வயிற்றுக் கோளாறுகளை நிவர்த்திக்கிறது!
- நோய் எதிர்ப்பு சக்தியை அதிகரித்து, ஆரோக்கியத்தை வளர்க்கிறது!
- பெண்களின் பலவீன நிலைமைகளைப் போக்கிப் புத்துணர்ச்சி அளிக்கிறது!
- வாழ்க்கையை முழுமையாக அனுபவிக்க வலிவும், பொலிவும் வழங்குகிறது!
- இருபதிலும் அறுபதிலும் இளமை உணர்வோடு வாழ உதவி செய்கிறது!

125 & 500 கிராம் அளவுகளில் எல்லா அங்காடிகளிலும் கிடைக்கிறது!

அனைவருக்கும் ஏற்றது.
பத்தியம் எதுவும் இல்லை

CROWN

தயாரிப்பாளர்கள்:

**கிரௌன் ஹெர்பல் ப்ராடக்ட்ஸ்**

55, ஹாரிஸ் சாலை, புதுப்பேட்டை, சென்னை-2.
(எழும்பூர் மாஜிஸ்ட்ரேட் கோர்ட்டுக்கு எதிரில்)
தந்தி: HERBAL KING.

கவியரசர் கண்ணதாசன் அவர்கள் குமுதத்தில் பாராட்டியுள்ள மூலிகை மருத்துவ ஆய்வாளர் டாக்டர் இ. ஷாஹுல் ஹமீது அவர்களின் ஆராய்ச்சித் தயாரிப்பு. மருத்துவ ஆலோசனையும் பெறலாம்.

**STOCKIST:** HOMOEOPATHIC DRUG CENTRE, 1. Corporation Shopping Complex, Behind Upparpet Police Station, Tank Bund Road, BANGALORE-560 009. Phone: 24882.

சிங்கப்பூரில் கிடைக்குமிடம்: M/s. GOVINDASAMY PILLAI [S] PTE. LTD., Serangoon Road, SINGAPORE.

# ஆஸ்திக அமைச்சரவை

**கி. ராஜேந்திரன்**

பழைய அமைச்சர் இருவாளர் மந்திரிசாமி புதிய இலாக்காவுக்குப் பொறுப்பேற்றுத் தமது காரியாலயத்துக்குள் நுழைந்ததும் அந்தரங்கக் காரியதரிசி வாசலிலிருந்து எட்டிப் பார்த்தபடி உள்ளே போவதா வேண்டாமா என்று தயங்கி நின்றார்.

''முருகா!'' என்றார் அமைச்சர்.

அந்தரங்கக் காரியதரிசி சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு, ''யாரைக் கூப்பிடுகிறீர்கள்?'' என்றார்.

''என்னப்பன் பழனியாண்டியைத்தான். உள்ளே வாங்க, என்ன விஷயம்?''

''ஒன்றுமில்லை... இந்த அவசர ஃபைல்கள் ரொம்ப நாளாக அவசரப்படாமல் பொறுமையாகக் காத்திருக்கின்றன...''

''அப்படியா! ஃபைல்களே அவசரப்படாத போது உமக்கென்னங்க அவசரம்?''

''அதற்கில்லை... முதல்வர் அமெரிக்காவிலிருந்து திரும்பி வந்து மந்திரிசபை அமைக்க ரொம்ப நாளாகி விட்டதில்லையா? அதனால்...''

''என்ன சொன்னீங்க? முதல்வரா?''

''இல்லே, இல்லே... புரட்சித் தலைவர் முதல்வர்!''

''என்னது?''

''ஸாரி, மூப்பிறவி எடுத்த புரட்சித்தலைவர் முதல்வர்...''

''போதாது! .போதாது!''

''மூப்பிறவி எடுத்த புரட்சித் தலைவர் டாக்டர் முதல்வர்?''

''அவ்வளவுதானா? 'இறையருளால்' என்னும் சேர்த்துக் கொள்ளுங்க...! அப்பனே, செந்திலாண்டவா!''

''சரி, இறையருளால் மூப்பிறவி எடுத்த புரட்சித் தலைவர் டாக்டர் முதல்வர் அமெரிக்காவிலிருந்து உடல்நலமுடன் திரும்பி...''

''நில்லுங்க! உடல்நலன் மட்டும்தானா? மனநலன், அறிவுக்கூர்மை அனைத்துடன் அதே பழைய முதல்வர் எம். ஜி. ஆராகவே திரும்பி...''

திருத்தத்தை ஏற்றுக் கொண்ட அந்தரங்கக் காரியதரிசி பெருமூச்சுடன் கட்டியம் கூறுபவன் போல் ஆரம்பத்திலிருந்து மறுபடி எல்லாவற்றையும் ஒப்பித்து விட்டுத் தொடர்ந்தார்: ''...அமைச்சரவைஅமைக்கக் கால தாமதமாகி விட்டதால் இந்த அவசர ஃபைல்கள் கவனிப்பாரின்றிக் காத்துக் கிடக்கின்றன.''

''எல்லாம் கந்தன் கருணை!''

''இவற்றை இப்போதேனும் கவனிக்க வேண்டும் என்பதை முருகன் கட்டளையாகப் பாவித்து...''

''கொஞ்சம் இருங்க... காரிலிருந்து என் ஃப்ரீப்கேஸ் வந்து விட்டதா?'' என்று அமைச்சர் கேட்டுப் பத்து நிமிஷங்களுக்குப் பிறகு அது அவசரப் படாமல் வந்துசேர, அமைச்சர் அதனைத் திறக்கவும் அந்தரங்கக் காரியதரிசி என்னவோ ஏதோ என்று திகைப்புடன் பார்த்துக் கொண்டு நின்றார்.

பிரீஃப் கேஸிலிருந்து ஒரு தகர டப்பாவை எடுத்து மூடியைத் திறந்தார் அமைச்சர்.

''என்ன ஸார் இது?''

''பழனி பஞ்சாமிர்தம், கையை நீட்டுங்க!''

தமது உள்ளங்கையில் வந்து விழுந்த இரண்டு தேக்கரண்டி பஞ்சாமிர்தத்தைப் பரிதாபமாகப் பார்த்தார் அந்தரங்கக் காரியதரிசி.

''என்னங்க முழிக்கறீங்க?'' என்று கேட்டார் அமைச்சர் அதட்டலாக.

''ஒன்றுமில்லே, இதை எப்படிச் சாப்பிடறதுன்னுதான் யோசிக்கறேன். உங்க எதிரேயே உள்ளங்கையை நக்க வேண்டியிருக்கும்...''

''பழனி பஞ்சாமிர்தத்தை வேறு எப்படி சாப்பிடுவதாம்? ம்... நடக்கட்டும்...'' என்றார் அமைச்சர். அ. க. வாகப்பட்டவர் பஞ்சாமிர்தத்தை ருசித்துக் கொண்டிருக்கும் போது அமைச்சர் தொடர்ந்தார்: ''பழனி பஞ்சாமிர்தம் போன்ற பிரசாதங்களைச் சாப்பிட்ட பிறகு கையலம்பப் போதிய அளவு பிரத்யேக வாஷ்பேஸின்கள் கோட்டையில் ஆங்காங்கே நிறுவப்பட வேண்டும். அமைச்சர்களின் அறைகளுக்குக் கார்பெட்கள் விரித்துக் கர்ட்டன்கள் போடுகிற செலவோடு இதையும் சேர்த்துக் கொள்ளலாம். இதற்குக் காண்ட்ராக்ட் எடுக்க எனக்குத் தெரிஞ்ச ஒரு நல்ல ஆசாமி இருக்காரு.''







''அவரிடமே பழனி பஞ்சாமிர்த சப்ளைக்கும் காண்ட்ராக்ட் கொடுத்திடலாம் சார்'' என்று கூறி அமைச்சரின் பாராட்டைப் பெற்றுக் கொண்ட அ.கா.கையலம்பிவிட்டுக் கைக்குட்டையால் துடைத்துக் கொண்டே வந்தார்.

''இப்போ இந்த ஃபைலைக் கொஞ்சம்...''

''இருங்கய்யா... கோப்பு எங்கே ஓடிடப் போவுது! உங்களை மாதிரி அவசரப்பட்டுக் காலிலே வெந்நீரைக் கொட்டிக்கிட்ட மாதிரி குதிக்கிறவங்களிடம் சிக்கிக்கிட்டா மொட்டைப் பிய்ச்சுக்க வேண்டியதுதான்'' என்று அமைச்சர் கூறவும்,

அ. கா. சந்தேகத்துடன் அமைச்சர் தலையைப் பார்த்தார்.

''என்ன பார்க்கிறீங்க?'' என்று கேட்டார் அமைச்சர். ''முதல்வர் பழைய முதல்வராகவே திரும்பினால் மொட்டை அடிச்சுக்கிறதாப் பிரார்த்தனை. திருப்பதியில் பிரார்த்தனையை நிறைவேற்றிவிட்டு வரேன். உம் போன்றவரிடம் சிக்கித் தலைமுடியைப் பிய்த்துக் கொள்ளாதிருக்கவும் அது உதவுது. எல்லாம் ஏழுமலையான் அருள்.''

இதற்குள் தமது தலைமுடியைப் பிய்த்துக் கொள்ளலாம் போல் அ. கா. வுக்குத் தோன்ற அதைக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டு மறுபடியும் ''ஸார்... இந்த ஃபைல்...'' என்று ஆரம்பித்தார்.

''முதலில் திருப்பதி லட்டுப் பிரசாதம் வாங்கிக்கங்க'' என்று சொன்ன அமைச்சர் மறுபடி பிரீஃப்கேஸைத் திறந்து பஞ்சாமிர்த டப்பாவை உள்ளே வைத்துவிட்டு பிளாஸ்டிக் உறையில் சுற்றப்பட்டிருந்த பெரிய லட்டை எடுத்தார். பிட்டுக்கொடுத்தார்.

அதைப் பக்தி சிரத்தையுடன் வாங்கி வாயில் போட்டுக் கொண்ட அ. கா. கையலம்பப் போனவர் திடும்மென்று நினைத்துக் கொண்டு திரும்பி வந்து, ''ஸார், வேறு ஏதாவது பிரசாதம் இருக்கா சாப்பிட?'' என்றார். ''இல்லை'' என்று உறுதியானதும் போய்க் கைகழுவிக் கைக்குட்டையில் துடைத்துக் கொண்டு வந்து சேர்ந்தார்.

மறுபடி அமைச்சர் ப்ரீஃப்கேஸைத் திறக்கவும், ''ஸார், ஸார்! போதும் ஸார்! ரெண்டு தடவை கையலம்பியாச்சு'' என்று அலறினார்.

''கவலைப்படாதீங்க! நான் தான் சாப்பிட பிரஸாதம் ஏதும் பாக்கி இல்லைன்னு சொன்னேனே'' என்ற அமைச்சர் லட்டுப் பொட்டலத்தை உள்ளே வைத்துவிட்டு, ''ஆதிபராசக்தி தாயே...'' என்று பரவசமாக அழைத்தவாறே மேல் மருவத்தூர் விபூதி, குங்குமப் பிரசாதத்தை எடுத்து வழங்கித் தாமும் இட்டுக் கொண்டார். கண்ணாடி எதிரில் போய் நின்று சரிபார்த்துக் கொண்டு திரும்பினார்.

''ஸார்! இந்த பிரீஃப்கேஸ் பார்த்தாச் சின்னதாண்டா இருக்கு! எத்தனை விதமான பிரசாதம் கொள்றது ஸார்!'' என்று வியந்தார் அ. கா.

''எல்லாம் காமாட்சி அருள்!'' என்ற அமைச்சர் மறுபடி ஃப்ரீப்கேஸைத் திறந்து ஒரு பொட்டலத்தை எடுத்துப் பிரித்தார். ''காஞ்சி முனிவர், நடமாடும் தெய்வம், முதல்வருக்காகத் தவமிருந்த தூயவர் வழங்கிய அட்சதை'' என்று அதை பிரஸன் செய்து கொடுத்தார்.

''முடிஞ்சிருச்சா ஸார்...? இனி இந்த ஃபைல்...''

''கிடக்குய்யா... அது எங்கே ஓடிப் போவுது? நான்தான் எங்கே போயிடறேன்.. இதப் பாருங்க, இப்பப் பதவி ஏற்றிருக்கிறது நாஸ்திக அமைச்சரவை இல்லே... ஆஸ்திக அமைச்சரவை... இந்த அறையிலே காஞ்சி முனிவர், வெங்கடாசலபதி, ஆதிபராசக்தி, பழனியாண்டி... (காங்கிரஸ் தலைவரைச் சொல்லலே என்று தம் ஜோக்கை எண்ணித் தாமே சிரித்தார்) இவங்க படமெல்லாம் மாட்டணும்... மதச்சார்பின்மைன்னு சொல்லி டபாய்க்கப் பார்க்காதீங்க. மதச் சார்பின்மைங்கறது மதங்களைப் புறக்கணிக்

றதாகாது. வேணுமின்னு ஏக படம் ஒண்ணும் மாட்டுங்க, மெக்கா ஃபோட்டோ ஒண்ணு கிடைக்குமா பாருங்க... கூடா துன்னு டைரக்டர் யாராவது நோட் போட் டாங்கன்னு லா மினிஸ்ட்டிரிக்கு விளக்கம் கேட்டு அனுப்புங்க...''

''சரி சார், இப்ப இந்த ஃபைல்...''

''வருஷாவருஷம் எம். எல். ஏக்களிடையே மாறுவேடப் போட்டி நடக்குமில்லே? எல்லாரும் ராமன், கிருஷ்ணன்னு வேஷம் போட்டுக்கிட்டு வருவாங்க... நான் பக்தனு வேஷம் போடப் போறேன்... இல்லே, இல்லே! அதாவது அசல் பக்தனுகிய நான் மாறுவேஷப் போட்டிக்காகக் காவடி தூக்கப் போறேன்...''

''நிச்சயமா உங்களுக்குத்தான் முதல்வர் பரிசு கொடுப்பார் ஸார்... இப்ப இந்த ஃபைல்...''

''கொண்டாங்கய்யா... கையெழுத்து வாங்காம விடமாட்டீங்களே... என்ன விஷ யம் இது...?''

''ரெண்டு கோடி காண்டிராக்ட் சார்... உங்களுக்கு முன்னே இங்கே பதவியிலிருந்த அமைச்சர் விருப்பப்படி காண்ட்ராக்ட் பெறத் தகுதியானவர் பற்றிய குறிப் பெழுதிக் கோப்புத் தயாராகியிருக்கு...''

''அப்ப சரி, தப்பு ஏதும் இருக்காது. காண்ட்ராக்ட் பெற இவரே தகுதியான வர்னு எழுதிக் கையெழுத்து போடறேன்.''

அந்தக் கோப்பு, அடுத்த கோப்பு அதற் கடுத்தது என்று பார்வையிட்டுவிட்டு, ''அப்பாடா'' என்று அசதியுடன் பேனவை மேஜைமேல் போட்டார் அமைச்சர்.

பிற்பகலில் இலாக்காவின் டைரக்டர் அமைச்சரைக் காண வந்தார். மறுபடி பிரசாதம் வழங்கு படலம் முடிந்தபின், ''வந்ததிலிருந்து உ ங் க ளை ப் பாராட்ட ணும்னு பார்க்கறேன்; பிரசாதமா கொடுத்து வாயடைச்சு வைக்கறீங்க'' என்ருர் டைரக் டர்.

''என்ன விஷயம்? எதற்குப் பாராட்டு?''

''அட, ஒன்றும் தெரியாத மாதிரி கேக்க றீங்களே, உம்...? ஸார், தப்பா எடுத்துக்கக் கூடாது... உங்களுக்கு முன்னுல் இங்கே இருந்து இப்ப பதவி இழந்துட்ட அமைச்சர் அந்த ரெண்டு கோடி காண்டிராக்டை ராமானுஜத்தை ஒதுக்கிட்டு நடராஜனுக்குக் கொடுக்கும்படி கோப்புத் தயாரிக்கச் செய் தது ரொம்பத் தப்பு. உள்ளே என்னவோ பெரிசா நடந்திருக்கு. அதை எப்படியோ புரிஞ்சுக்கிட்டு நீங்க ராமானுஜத்துக்கே காண்ட்ராக்டைக் கொடுத்திருக்கீங்க. உங்க அந்தரங்கக் காரியதரிசி கூட முதல்லே உங்க பேச்சிலே ஏமாந்துட்டாரு. அப்புறமா கோப்பைப் பிரிச்சுப் பார்த்தா உங்க உத் தரவு வேற மாதிரி இருக்கு! டிபார்ண்ட் மெண்ட்லே எல்லாரும் அசந்து போயிட் டாங்க! உங்களைப் பாராட்டாதவங்க கிடை யாது! அந்த உள்ளுணர்வைத் தெய்வ பக்தி தான் உங்களுக்குத் தந்திருக்கிறதா நினைக்கி ருங்க...''

இயக்குனர் ஓரேயடியாகப் பாராட்டிக் கொண்டே போகவும் அமைச்சர் ஒன்றும் புரியாமல் விழித்தார். 'கோப்பிலே நாம் ஒரு மாறுதலும் செய்யவில்லையே? என்ன நடந்தது?' என்று யோசித்துக் குழம்பினர். ''அப்படி என்ன பிரமாதமா நான் எழுதிட் டேன்?'' என்று சகஜமாகக் கேட்பதுபோல் கேட்டார்.

''என்ன ஸார் கேள்வி இது! 'ஸ்ரீ ராமானு ஜம் — காண்ட்ராக்ட் பெற இவரே தகுதி யானவர்' என்று தெளிவா, உங்க கைப்பட



அவர்: ''மனைவிகிட்டே துணிஞ்சு அடிக்கடி கேள்வி கேக்கறவர், நம்ம திருமலை ஒருத்தர் தான்...!''

இவர்: ''அப்படியா! என்ன கேட் பார், அவர்?''

அவர்: ''மனைவிசொன்ன ஒவ்வொரு வேலையைச் செய்து முடிச்சதும், ''அப் புறம் என்ன வேலை செய்யணும்?'' என்றுதான்!''

—பால. கோவிந்தராஜ்.

எழுதிக் கையெழுத்துப் போட்டிருக்கீங்களே ஸார்'' என்ருர் இயக்குனர்.

'அட ராமா! முதன் முதலாக ஒரு கோப் பில் பேனவை வைக்கிறேம் என்பதால் ஸ்ரீ ராமஜெயம் எழுதப் போய் ஸ்ரீராமானு ஜம் என்று எழுதிவிட்டேனு? அல்லது என் கையெழுத்தைத்தான் பிறர் அப்படிப் புரிந்து கொண்டார்களா, தெரியவில்லையே!' என்று தமக்குள் அதிசயித்தார் அமைச்சர்.

அது எப்படியானலும் மறுநாள் அவர் கோட்டைக்கு வரவில்லை. விசாரித்ததில் மதுராந்தகம் ஏரிகாத்த ராமரைத் தரி சிக்கப் போயிருப்பதாகத் தெரியவந்தது.

# விளம்பர விஷமம்

இரண்டு தனித்தனி விளம்பரப் படங்களை எடுத்துக் கொள்ளுங்கள். ஒன்றின் பக்கத்தில் ஒன்றாக வையுங்கள். ஒரு கிண்டல் வசனம் எழுதுங்கள். விளம்பர விஷமம் தயார்!



















கற்பனை: ஜெயந்தி

தலையைச் சுற்றி அழுத்தமாகக் கட்டப்பட்ட துணியுடன் ''மண்டையை உடைக்கிறதே'' என்று சொல்லிக் கொண்டே படுத்திருந்தாள் வயதானவள்.

''நீ சொன்னால் கேட்க மாட்டாய். டாக்டரிடம் போ என்றால் போகிறது இடையாது. மண்டை வலி வந்தவுடனேயே ஒரு மாத்திரையைச் சாப்பிடு என்றாரே டாக்டர், சாப்பிட்டாயா?'' என்றார் வயது வந்த கணவர்.

''இப்பவாவது அந்த மாத்திரையைச் சாப்பிடேனம்மா'' என்று பெண் கையில் ஒரு மாத்திரையுடனும், மற்றொரு கையில் வெந்நீரும் வைத்துக் கொண்டு அம்மாவின் எதிரில் நின்றாள்.

''ஒவ்வொரு நாளுமா மாத்திரை? என்னவோ டாக்டர்கள், என்னவோ மாத்திரைகள்'' என்று அங்கலாய்த்துக் கொண்டே ''கொண்டா, உங்க அப்பா, உன் விருப்பத்துக்குக் குறுக்கே நிற்பானேன்'' என்று தண்ணீரை வாயில் கொட்டிக் கொண்டு மாத்திரையை விழுங்கினாள். ''இதோ இந்தத் துணியை இன்னும் கொஞ்சம் இறுக்கிக் கட்டு'' என்றாள் தாயார்.




''பின்னே மாத்திரையை விழுங்கச் சொல்லிக் கொண்டே இருக்கிறீர்களே?''

''தலைவலி ஆரம்பத்திலேயே மாத்திரையைப் போட்டுக் கொண்டால் கொஞ்சம் கேட்கும்'' என்றார் டாக்டர்.

''புருஷாள்ளாம் எந்த வைதீக சடங்குன்னாலும் முதல்லே 'ஆசமனம்'ன்னு சொல்றானே அதுமாதிரி தலைவலி சடங்குக்கு ஆசமனம் இந்த மாத்திரை போலிருக்கு''. என்று இந்தக் காலத்து வியாதிகளைச் சொந்தப்படுத்தும் போக்கைக் கொஞ்சம் கிண்டல் செய்தாள். டாக்டரும் சிரித்தார். வெளியே போகும் போது வயதான கணவரைப் பார்த்து,

# தலைவலி (தரும்) ஸ்பெஷலிஸ்டுகள்!

அப்சரஸ்

வயது வந்த தகப்பனார் அதற்குள் டாக்டருக்கு டெலிபோன் செய்து அவர் கிளினிக்குக்குப் போகும் போது வந்து விட்டுப் போகச் சொன்னார். பத்து நிமிடத்தில் டாக்டர் கார் ஹார்ன் சத்தம் கேட்டது. உள்ளே நுழைந்து வயது வந்த அம்மாவின் நாடியைப் பார்த்தார். ரத்த அழுத்தப் பரிசோதனை முடிந்தாயிற்று.

''என்னம்மா, தாங்க முடியலையா? என்ன இவ்வளவு அழுத்தமாய்த் துணியைத் தலையில் கட்டியிருக்கிறீர்கள்? தலைக்கு ரத்தமே போகாது போல இருக்கிறதே'' என்றார் டாக்டர்.

''தலைக்கு ரத்தம் போகிறதோ இல்லையோ அழுத்திக்கட்டி இத்துடன் ஒரு வாரத்தில் ஐந்து டவல்கள் கிழிந்ததுதான் கண்டது. தலைவலி நின்றபாடில்லை'' என்றாள் நோயாளி.

''என்ன இப்படி... இது மைக்ரேன் தான். அதற்கு மருந்து என்று ஒன்றுமில்லை...''



''சாதாரண தலைவலி, மைக்ரேன் போன்றவற்றுக்குக் கொடுக்கும் மாத்திரை குணப்படுத்தவில்லை. ரத்த அழுத்தமும் இல்லை. ஒருவேளை வயிற்றில் ஏதாவது கோளாறு இருக்குமோ என்னவோ. ஒரு ஸ்பெஷலிஸ்டுக்குக் கடிதம் கொடுக்கிறேன். அவரைப் போய் கன்ஸல்ட் செய்து விடுங்களேன்'' என்று அவர் பெட்டியைத் திறந்து வயிற்று ஸ்பெஷலிஸ்டுக்கு ஒரு கடிதம் கொடுத்தார்.

மறுநாள் வேண்டாவெறுப்பாக வயதான அம்மையார், கணவருடனும், பெண்ணுடனும் வயிறு ஸ்பெஷலிஸ்ட்டிடம் போனார். டாக்டர் கொடுத்த கடிதத்தைப் படித்துப் பார்த்தார் ஸ்பெஷலிஸ்ட்.'' ஒரு ஈ. ஸி. ஜி. எடுத்து விடுங்கள்; பேரியம் மீல்ஸ் எக்ஸ்ரே ஒன்னு எடுத்து விடுங்கள். நான் சொல்ற டாக்டரிடம் போங்கள். அவரிடம் ஸ்கானர் இருக்கிறது. அதையும் பார்த்து விடுவோம். இதையெல்லாம் கொண்டு வாருங்கள் என்ன வைத்தியம் தேவை என்று நிர்ணயிப்போம். அதுவரையிலும் உங்கள் டாக்டர் கொடுத்தாரே அதையே தலைவலி வருகிற போதெல்லாம் கொடுங்கள்'' என்று பீஸ் வாங்கிக் கொண்டு தலைவலியம்மாளை அனுப்பினார்.

கணவரும், பெண்ணும் அம்மாவிற்கு வேப்பிலையடித்தார்கள். ''இந்தச் சௌகரியங்கள் இருக்கும்போது செய்து பார்த்து விடுவோமே... தலைவலியில் ஏன் கஷ்டப்பட வேண்டும்?''

''வேறு வேலை கிடையாது உங்களுக்கு.



டாக்டர்கள் ஈ.ஸி.ஜி., பி.ஸி.ஜி. எல்.கே. ஜின்னு சொல்லிண்டுதான் இருப்பாங்க. ஒருத்தன் ஜாதகத்தை எடுத்துக் கொண்டு ஒவ்வொரு ஜோஸியராப் போய் கன்ஸல்ட் பண்ணினானும். அப்புறம் ஒருத்தர் சொன்னார். பருத்திப்பட்டு ஜோஸியரிடம் போங்க. அவர் சோழி போட்டுப் பார்த்துச் சொன்னாரானு ஒவ்வொரு கிரகமும் அவர் சொல்லுறபடி ஆடும்னாராம். அவரைப் பார்க்கப் போனார். உங்களுக்கு இரண்டு வருஷம் கஷ்ட காலம்னார். 'அப்புறம்? 'என்றார் ஜாதகம் கொடுத்தவர்.' அது பழகிப் போயிடும். அதனாலே கஷ்டம் தெரியாது' என்றாராம். அந்த மாதிரி இன்னும் கொஞ்ச நாளாச்சுன்னு முண்டாகத் தலை பழகிப் போய்விடும்!''

இப்படி மறுத்துச் சொன்னபோதிலும் அவர்கள் நிர்ப்பந்தம் பொறுக்க முடியாமல் தாயார் பரிசோதனைகளுக்கு ஒத்துக் கொண்டாள். ஈ.ஸி.ஜி. எல்.கே. ஜின்னு கிண்டல் பண்ணிய எல்லாப் பரிசோதனைத் தாள்களுடனும் வயிற்று ஸ்பெஷலிஸ்டிடம் மறுபடியும் போனார்கள்.

ஸ்பெஷலிஸ்ட் எல்லாவற்றையும் பார்த்தார். ''வாயைத் திறவுங்கள்'' என்றார்.

''இந்தப் பரிசோதனைகளில் வயிற்றில் ஒருவிதக் கோளாறும் தெரியவில்லை. ஒருவேளை பல் சரியாக இல்லாவிட்டால் கூட இந்த மாதிரி தலைவலி வரலாம். அதனால் நான் சொல்லும் பல் டாக்டரிடம் போங்கள்'' என்று அனுப்பிவிட்டார்.

''பல் டாக்டரிடம் வாவென்று எப்படி அழைத்துப் போவது?'' என்று அவள் கணவர் யோசித்துக் கொண்டே அமெரிக்காவில் கண் வைத்தியம் படித்து வரும் பிள்ளைக்கு டெலிபோன் செய்து அவனை அம்மாவிற்கு உபதேசம் செய்யச் சொன்னார்.

பையன் அன்று இரவு அம்மாவுக்கு அமெரிக்காவிலிருந்து டெலிபோன் செய்து, ''அம்மா, அடுத்த வாரம் வருகிறேன். ஸுதா சௌக்யம். மிருதுவும் ஷர்மிளாவும் வருகிறார்கள். ஆமாம், உனக்கு அடிக்கடி தலைவலி வருகிறதாமே. அப்பா சொன்னார். டாக்டரிடம் அழைத்துப் போனாராம். பல் டாக்டரைப் பார்க்கச் சொன்னாராம். போய்ப் பார்'' என்றான்.

''பிள்ளையில் பொரிசா?'' என்று அம்மா சிடுசிடுத்தாள்.

''நாங்க சொன்னால் கேட்க மாட்டாய்.''

''பிள்ளை சொல்லிட்டான். கேட்க வேண்டியதுதான். வயதான காலத்திலே அவன் தானே வைத்துக் காப்பாற்றணும்''.

இந்தத் தடவைப் பிள்ளைக்காகச் சம்மதித்தாள். பல் டாக்டரிடம் போனாள். அவர் அமெரிக்காவிலிருந்து கொண்டு வந்திருக்கும் எல்லா நவீனக் கருவிகளையும் உபயோகித்து, ''பற்களில் ஒரு கோளாறு மில்லை. நீங்கள் எதற்கும் ஒரு கண் ஸ்பெஷலிஸ்டைப் பார்ப்பது நலம்'' என்று அனுப்பிவிட்டார்.

அடுத்த வாரம் கண் ஸ்பெஷலிஸ்ட் பிள்ளை அமெரிக்காவிலிருந்து ஸுதா, பெண் குழந்தைகள் மிருது, ஷர்மிளாவுடன் வந்து சேர்ந்தான். வீட்டில் ஒரே கும்மாளம். ''மிருது, ஷர்மி, பாட்டிக்குத் தலைவலி வந்துடும். தொந்தரவு கொடுக்காதே'' என்று எச்சரித்த வண்ணமிருந்தார்கள்.

''அம்மா ஸ்பெஷலிஸ்ட் ரிப்போர்ட்டெல்லாம் கொண்டா பார்க்கலாம்'' என்று பிள்ளை அதையெல்லாம் படித்தான். அம்மா பிள்ளையிடம் ''கடைசியாகக் கண் ஸ்பெஷலிஸ்டுக்கு வந்தாச்சுடா. நீதான் பரிசோதனை செய்து பார்த்துவிடேன்'' என்றாள்.

''ஒரு பக்கம் தலைவலியா? அம்மா ஒரு கஷ்டம். நான் வலது கண் சிகிச்சையைத் தான் ஸ்பெஷலைஸ் பண்ணி இருக்கிறேன். இதை எல்லாம் பார்த்தா இடது கண் ஸ்பெஷலிஸ்ட்டைப் பார்க்கணும்னு தோன்றுகிறது. அமெரிக்காவில் எனக்குத் தெரிந்தவர் இருக்கிறார். அவருக்கு எழுதிக் கேட்கட்டுமா'' என்றான் பிள்ளை.

''நீ வலது கண் ஸ்பெஷலிஸ்டுதானா! ஆமாம், நீ எழுதறேன்னு சொல்றியே, இடது கண் ஸ்பெஷலிஸ்டுன்னு அவன் வந்து கண்ணிலே தப்பில்லை, புருவத்திலே இருக்கலாம். அதனாலே புருவம் ஸ்பெஷலிஸ்டைப் பாருங்கள்' என்று சொன்னால்'' என்றாள் தாயார். எல்லோரும் கொல்லென்று சிரித்து விட்டார்கள்.

''பாட்டி கையில் சாதம் போடணும்'' என்று பேத்திகள் மிருது ஒரு கையையும், ஷர்மி ஒரு கையையும் பிடித்து இழுத்தார்கள். ஒவ்வொரு நாளும் ஒவ்வொருவிதமான கோரிக்கைகள் பேத்திகளிடமிருந்து பாட்டிக்கு வந்தன. ''பாட்டி இன்று எங்களுக்கு டிபன் போளி! இன்னிக்குப் புளியோதரை... நாளைக்குப் பால் பூரி'' என்று லிஸ்டு வளர்ந்து கொண்டு வந்தது.

பேத்திகள் வந்து பதினைந்து நாட்களாகி விட்டன. பாட்டியின் தலையில் கட்டே இல்லை. மாத்திரை இல்லை. மாயமில்லை. கணவர் கண் சிமிட்டிக் கொண்டே, ''ஏண்டா சுரேஷ்! உங்க அம்மாவுக்கு இரண்டு ஸ்பெஷலிஸ்ட்கள் தலைவலி மருந்து கொடுத்துக் கொண்டிருக்கிறார்களே பார்த்தியா?'' என்று மனைவியைக் கிண்டல் செய்தார். பிள்ளை விழித்தான். ''அதாண்டா, மிருது, ஷர்மி'' என்று மனைவிக்கு தலைவலி எதனால் என்று புரிந்து கொண்ட ஆனந்தத்தில் சொன்னார்.

''இதுகள்அமெரிக்காபோனதிலே இருந்தே எனக்கு ஏக்கம்'' என்று அந்த இரண்டு வலக்கண், இடக்கண் ஸ்பெஷலிஸ்டுகளையும் அணைத்துக் கொண்டு முத்தமிட்டாள் தலைவலி அகன்ற பாட்டி.




# அவர் மரணமும் ஒரு மர்மமே!




● 'ரேன் ப்ரபாஸன் ரேமண்ட் ( Rane Brabazon Raymond ) ஐத் தெரியுமா?' என்று கேட்டால், யார் அவர் என்று கேட்போம். ஜேம்ஸ் ஹேட்லி சேஸ் அவர்களின் உண்மைப் பெயர் அதுதான்! சேஸ் எத்தனை நாவல்கள் எழுதியிருக்கிறார் என்று யாருக்குமே சரியாகத் தெரியாது — ஏன், சேஸின் மனைவிக்குக் கூடத் தெரியாது. ஸ்விட்சர்லாந்தில் காலமான சேஸுக்கு வயது 78.

● ஏராளமான புனை பெயர் வைத்துக் கொண்டவர். சேஸ் என்ற இந்தப் பிரபல மான பெயரில் மட்டும் நூற்றுக்கு மேற்பட்ட நாவல்கள் எழுதியிருக்கிறார். முப்பது நாவல்கள் திரைப்படமாகியிருக்கின்றன. 'நோ ஆர்ச்சிட்ஸ் ஃபார் மிஸ் பிளாண்டிஷ்' இவரது மிகச் சிறந்த நூலாகக் கருதப்படுகிறது.

● விளம்பரப் பிரியம் இல்லாத வெகுளி சேஸ். வாழ்நாளில் அதிகமாக யாருக்கும் பேட்டி கொடுத்ததில்லை.

● அவர் இறந்ததே மர்மமாக இருந்ததாம்; யாருக்கும் தெரியாது. கடைசியில் அவர் மனைவி, சேஸ் மரணமான செய்தியைத் தெரிவித்தாலும், விவரங்களைத் தெரிவிக்க மறுத்து விட்டாராம்.

'என் கணவருக்கு விளம்பரம் பிடிக்காது. வாழ்ந்தபோது கொடுக்காத அந்த விளம்பரத்தை அவர் இறந்த போது மட்டும் ஏன் கொடுக்க வேண்டும்?' என்று கேட்டாராம்!

## ஜேம்ஸ் ஹாட்லி சேஸ்

ஆதாரம்: சண்டே அப்சர்வர்.
தகவல்: எஸ். வி. என்.



பிரெஞ்சு கினியாவிலுள்ள மக்கள் 'தகி' என்ற மொழியைப் பேசுகிறார்கள். உலகிலேயே குறைந்த சொற்களை உடைய மொழி இதுதான். இந்த மொழியில் மொத்தம் 340 சொற்கள் தாம் உள்ளன.
—எஸ். விஜயா சீனிவாசன்.

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032 (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani  Editor: K. Rajendran

## வாய் துர்நாற்றத்தை தடுத்திடுவீர். பற்சிதைவை எதிர்த்திடுவீர்.



# கோல்கேட்டின் பாதுகாப்பு வளையத்தை பெற்றிடுவீர் !

தவறாமல் கோல்கேட் உபயோகிப்பதால்,
உங்கள் குடும்பத்தினரின் பற்களுக்கு ஆரோக்கியம், வலிமை, புத்துணர்ச்சி
தரும் தூய சுவாசம் கிடைக்கிறது.
இதுவே கோல்கேட்டின் பாதுகாப்பு வளையம்.

நீங்கள் பல் துலக்கும் ஒவ்வொரு முறையும்
கோல்கேட்டின் நம்பகமான ஃபார்முலா
செயல்படுவது எப்படி என்றால்...



உணவுத் துணுக்குகள் பற்களுக்கிடையே
சிக்கிக் கொள்வதால் துர்நாற்றத்தையும்,
பற்சிதைவையும் உண்டாக்கும்
பாக்டீரியாக்கள் வளருகின்றன.



கோல்கேட்டின் ஒப்பற்ற செயல்புரியும்
நுரை ஆழ ஊடுருவிச் சென்று,
துர்நாற்றத்தை ஏற்படுத்தும் உணவுத்
துணுக்குகளையும் சிதைவு ஏற்படுத்தும்
பாக்டீரியாக்களையும் அகற்றுகிறது.



முறையாக கோல்கேட் கொண்டு பல்
துலக்குவதால் புத்துணர்ச்சி தரும்
தூய சுவாசமும், வலிமை மிகுந்த
ஆரோக்கியமும் தருகிறது.

ஒவ்வொரு முறையும் சாப்பிட்ட உடன்,
உங்கள் குடும்பத்தினர் தவறாமல் கோல்கேட்
கொண்டு பல் துலக்கட்டும்.
வாய் துர்நாற்றத்தை தடுத்திடுவீர்.
கோல்கேட்டின் பாதுகாப்பு வளையத்தை பெற்றிடுவீர்.




GK&E.B84.55 Tam

**கோல்கேட்டின் புத்துணர்ச்சி தரும்**
**பெப்பர்மெண்ட் சுவை உங்களுக்கு விருப்பமானது !**

REGISTERED . No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

# நறுமணத்துடன் புது மலர்ச்சிதரும் அந்த முதற் காப்பியின் சுவை:...



## ...நாளில் எந்நேரத்திலும்.

ஆஹா! ஒவ்வொரு நாளையும் எத்தனை சிறப்பாக தொடங்கலாம். அம்மா தயாரித்த அந்த புத்துயிரூட்டும் அருமையான முதற் காப்பியுடன்! ஈடு இணையற்ற அந்த கமகமவென்ற மணம் மற்றும் முழுமையான சுவைதரும் நிறைவு... உங்களுக்கு புத்துணர்ச்சியூட்டி, புலன்களைத் தட்டியெழுப்பும் அதன் மகிமை!

காலங்காலமாய் ஒரு சிறந்த எடுத்துக் காட்டு மாதிரி இருக்கும் அந்த காப்பியே எங்களையும் ஸன்ரைஸை தயாரிக்க ஊக்கமளித்தது.

**ஸன்ரைஸ். சிறந்த காப்பிக்கு ஒரு நற்சான்று.**

அம்மா தயாரிக்கும் காப்பி போலவே தயாரிக்கப்பட்டது ஸன்ரைஸ். புது மலர்ச்சியளிக்கும் அந்த முதற் காப்பியை எந்நேரத்திலும் விரும்பும் காப்பி அன்பர்களுக்காக. அந்த முதற் காப்பியின் நறுமணத்தையும், சுவையையும் எந்நேரத்திலும் நீங்கள் வேண்டும் போதெல்லாம் அளிக்கும் ஒரு சிறந்த காப்பி-சிக்கரி கலவை.




**Nestlé**

# ஸன்ரைஸ்

**இன்ஸ்டன்ட் காப்பி-சிக்கரி ப்ளெண்ட்**

**அம்மாவின் காலை காப்பியின் புத்துணர்ச்சியூட்டும் நறுமணத்துடன்.**